# சீனத்துச் சிங்கம்

## சன்யாட்சன்




உளகுசுவி

கலைமன்றம்
சென்னை-1

# எங்கள் ஆசை

—o—

சீனுவின் வரலாறும் சன்யாட்சன் வரலாறும் இந்நூலில் காணலாம். சன்யாட்சன் தன் நாட்டின் வரலாற்றையும், சொந்த வரலாற்றையும் சொல்லுவது போலவும், கோமிண்டாங் கட்சியும் தன் வரலாற்றை உரைப்பது போலவும் புது முறையில் நண்பர் ஊடுருவி நந்த எழுதியுள்ளார்.

சீனக் குடியரசின் உற்பத்தியாளனாகிய சன்யாட்சனை சீனத்துச் சிங்கம் என்ற பெயருடன் இந்நூல் உங்களுக்கு அறிமுகப்படுத்துகிறது. உலகைத்திருத்திய உத்தமர்களில் ஒருவராகிய சன்யாட்சனைப்பற்றி நீங்கள் கட்டாயம் அறிந்து கொள்ளவேண்டும் என்ற ஆசையே இந்நூல் வெளியிடுவதன் காரணம். உங்களின் ஆதரவு குறையாது என்று தெரிவோம். உங்களின் ஆதரவிற்கு நன்றி!

வணக்கம்
கலைமன்றத்தினர்.

## ஆசிரியரின் பிற நூல்கள்

—o—

**ஆராய்ச்சி**

கோயில்கள் (இங்கர்சால்)
உண்மை ,,
கடவுள் ,,
மக்கள் உரிமை ,,
அரசாங்கம் (லெனின்)
மாஜி கடவுள்கள்

**வரலாறு**

கலிங்கப்போர்
வீரமங்கை ஜோன்
உலகைத் திருத்திய
உத்தமர்கள் (1-ம் பாகம்)
ஒளி விளக்குகள் (2-ம் பாகம்)
ரஸ்புடீன்

**கதைகள்**

ரோமியோ-ஜூலியத் (ஷேக்ஸ்பியர்)
லைலா - மஜ்னு
நாநா (எமிலிஜோலா)

ஸ்ரீமகள் அச்சகம், சென்னை—1

# சன்யாட்சன்

“தலையைக் கொண்டு வருபவர்களுக்குத் தகுந்த சன்மானம் வழங்கப்படும், உயிரோடு பிடித்துத் தரு பவர்களுக்கு ஏற்ற வெகுமதி தரப்படும்” என்று மஞ்சு அரசாங்கம் பிரகடனப் படுத்தியது. இந்த விளம்பரம் யாரைப் பற்றியது என்று உங்களுக்குத் தெரிய வேண்டு மல்லவா? வேறு எவரையோ அல்ல. என்னைப் பற்றி யதுதான். என் தலைக்குத்தான் அவ்வளவு மதிப்புத் தந்தது அரசபீடம். தோழர்களே! என் தலையைக் கொடுத்திடுவேன்; உயிரைப் பெரியதாய் மதிக்கவில்லை நான். யாராவது ஓர் ஏழையிடம் சென்று என்னை அரசாங்கத்தினிடம் ஒப்படைத்துவிட்டு, அவர்கள் அளிக்கும் பரிசைப் பெற்றுக் கொள்ளும்படி செய்யலாம் என்றுகூட நினைத்தேன். ஆனால் அப்படிச் செய்யவில்லை. நான் உயிரோடு இருக்க வேண்டுமா? வேண்டாமா? என்ற இரு பெரும் பிரச்னைகள் என் உள்ளத்தே எழுந்து ஒன்றோடொன்று பலமாக மோதிக் கொண்டன. கடைசியில் இருக்கவேண்டும் என்ற பிரச்னைதான் வெற்றிபெற்றது. நானும் என்னை இழந்துவிடும் எண்ணத்தை மாற்றிக் கொண்டு இருக்க வேண்டும் என்றே முடிவு செய்து கொண்டேன். ஏன் என்னை உயிருடன் விட்டு வைக்க

விரும்பவில்லை என்ற கேள்விக்கும் பதில் சொல்ல வேண்டியவனாக இருக்கிறேன் கேளுங்கள்! ஒரு பெரிய கொள்ளையை நடத்தி விட்டேனா? கொலைக்காரர்களுக் குத் தலைமை பூண்டு கொலை செய்வதையே தொழிலாகக் கொண்டேனா? அல்லது காமக் களியாட்டத்தில் மூழ்கிக் கன்னியர்களின் கற்பைச் சூறையாடினேனா? அல்லது மனதால் நினைக்கக் கூசும் கொடும் செயல்கள் புரிந்தேனா என்று நீங்கள் சந்தேகப் படவேண்டாம். அவைகள் என் நாட்டில் மட்டுமல்ல உலகின் எந்தப் பாகத்திலும் இருக்கக்கூடாது என்று கருதுபவன்தான் நான். இருந் தும், என்னை மஞ்சு அரசாங்கம் உயிரோடு விட்டு வைக்க விரும்பவில்லை. என் உயிரைக் குலைத்துவிட்டுத் தன் பசி யைத் தீர்த்துக் கொள்ளவே மும்முரமாக ஈடுபட்டு விட்டது. நான் என்ன செய்தேன்? என்பதை உங்க ளிடம் கூறுகிறேன் நீங்களே கூறுங்கள் அவைகள் குற்றமா என்று! நான் யார்? என் வரலாறு என்ன? என்பதை முறையோடு உரைக்கின்றேன் கவனத்தோடு கேட்டு நீதி வழங்குங்கள்.

என்னைப்பற்றிக் கூறுவதற்கு முன்னர் நான் பிறந்த நாட்டைப் பற்றியும், அதன் வளத்தைப் பற்றியும் சில சொல்ல வேண்டு மல்லவா? அப்படி நான் சொல்லாவிட் டால், என்னை நாட்டுப் பற்றுடையவன் என்றும், மொழி யின்மீது மோகம் கொண்டவன் என்றும் என் நண்பர் கள் கூறுகின்றனரே அதற்கு மாசுண்டாக்கிய மாபாத கம் செய்தவனாவேன்.

எங்கள் நாட்டை அன்னியர் 'சீனு' அல்லது 'சைனு' என்று அழைக்கின்றனர். ஆனால் நாங்கள் அவ்விதம் அழைப்பதில்லை. "டாசுங்-ஹுவாமின்-குவோ என்று பெருமையோடு அழைத்து ஆனந்திப்போம். ஏன் தெரியுமா? அந்தச் சொல்லுக்குப் புகழ் நிறைந்த பொன்னாடு. என்றும், பூமி என்னும் மரத்தின் மத்திய பாகத்தில் மலர்ந்த ஒரே ஒரு மணமலர் என்றும் பொருள்கள் உண்டு. அப்படித்தான் நாங்கள் அழைப்போம். இதற்குச் சைனு என்று ஏன் பெயர் வந்ததென்றால் ஆதிகாலத்தில் எங்கள் நாட்டை "சின்" வம்சத்தினர் ஆண்டு வந்தனர். அந்த சின் தான் பின்னர் "சைனு" ஆக மாறியது.

எங்கள் நாட்டின் ஆதிகால நிலப் பரப்பு மிகவும் நீண்டிருந்தது. எங்கள் நாட்டின் எல்லைப்புறமானது கொரியா, சைபீரியா, ருஷ்ய துருக்கிஸ்தானம், ஆப்கானிஸ்தானம், இந்தியா, பர்மா, இந்தோ-சீனு ஆகிய நாடுகளையும், பசிபிக் பெருங் கடலையும் தழுவிக் கொண்டிருந்தது. இதன் சுற்றளவு: 43,14,097 சதுர மைல். இங்கு வாழும் மக்கள் எண்ணிக்கை: 45,07,93,390. ஆசியா கண்டத்தில் நான்கில் ஒரு பகுதி எங்கள் சைனு. உலக மக்களின் எண்ணிக்கையால் நூற்றுக்கு இருபத்து மூன்றுபேர் எங்கள் நாட்டில் இருந்தனர். இந்தக் கணக்கு இன்றுள்ளதல்ல. ஆதிகால சைனுவில் என் பதை மறந்துவிடப் போகிறீர்கள். அந்தக் காலத்தில் உலகிலேயே பெரிய ஏகாதிபத்திய ஆட்சி செலுத்தியது எங்கள் நாடு. அதிகம் சொல்வானேன். சீனுவை ஒரு

கண்டம் என்றே அழைப்பார்கள். சீன நாட்டு மன்னர் அளிக்கும் பட்டம்தான் மற்ற மன்னர்கள் அளிக்கும் பட்டங்களைவிடக் கௌரவ முடையது.

எங்கள் நாட்டின் மத்திய பாகம்தான் வளமான பிரதேசம். அங்குதான் ஷாங்காய் என்னும் நகரம் இருக்கிறது. அந்த நகரில் இரு பெரும் நதிகளான ஹோயாங் கோவம், யாங்க்ட்ஸீகியாங்கும் பாய்கின்றன. ஹோயாங் கோ, 2,580 மைல் நீளமும், யாங்க்ட்ஸீகியாங் 2,850-மைல் நீளமும் உடையது.

எங்கள் நாடு ஒரு விவசாய நாடு இந்தியாவைப் போல! நூற்றுக்கு எழுபத்தைந்து பேர் உழவர்கள் மலிந்த நாடு! இருபத்தெட்டு மாகாணங்களாகப் பிரித்து ஆண்டனர் பழைய சீனுவை. அப்போது நாங்கள் அன்னியர்கள் வசதியோடு வாழ வழிசெய்து தந்தோம். ஏன் தெரியுமா? எல்லோரும் சுகமாய் வாழவேண்டும் என்ற நல்ல எண்ணத்தால்; பின்னர் அவர்கள் நன்றி கொன்றவர்களாக மாறிவிடுவர் என்று அப்போது எவரும் கருதவில்லை. சீனுவில் எல்லா மதங்களுக்கும் இடமுண்டு; எல்லா மொழிகளுக்கும் இடமுண்டு. சீனர்களாகிய நாங்கள் பொதுவாக மதத்துவேஷ மற்றவர்கள். எங்களிடமிருந்த சிறந்த பண்புகளில் தலை சிறந்தவை முன்னோர்கள் வழிபாடு; மூதாதையர்களிடம் பக்தி. எங்கள் நாட்டில் பெரிய குடும்பஸ்தனுக்கும், முதிர்ந்த வயதுடையவனுக்கும், மரியாதை அதிகம் செலுத்துவோம். எங்கள் நாட்டுப் பெண்களுக்கு வீட்டின் அதிகாரம்

கொடுத்துவிட்டு ஆண்கள் வெளியில் அதிகாரம் செலுத்தி வந்தோம். இவ்விதமாக ஆதிகால வழ்வு எங்கள் சீனவில் நடைபெற்று வந்தது.

எங்கள் நாட்டின் சரித்திராசிரியனின் கண்களில் பட்ட ஆதிகால முதல் அரசன் ஹூவாங்தீ என்பவன். இந்த ஆட்சி கி. மு. 2697–ஆம் ஆண்டில் நடைபெற்றது. அஃதாவது இன்றைக்கு சற்றேறக்குறைய 4,640 ஆண்டுகளுக்கு முன்னர் இந்த முதல் அரசனை, மஞ்சள் மன்னன் என்றும், பிதாமகன் என்றும் கூறுவார்கள். இவன் ஆட்சியில் எவ்வளவோ சீர்திருத்தங்கள் செய்திருக்கிறன். இவன் கண்டு பிடித்தவைகளில் சிலவற்றை உங்களுக்குக் கவனப் படுத்துகின்றேன். மாகாணங்களை ஏற்படுத்தினன்; அவைகளை மத்திய அரசாங்கத்திற் குட்பட்டு நடக்கச் செய்தான். உயர்ந்த கட்டிடங்களைக் கட்டுவித்தான். பூமி மீதும் கடல்மீதும் வேகமாக விரைந்து செல்ல ஊர்திகளைக் கண்டு பிடித்தான். நாள் காட்டும் காலெண்டர் கண்டுபிடித்தான். நாணயச் செலவாணி முறைகள், திசையறியும் கருவி முதலியவைகளையும் கண்டு பிடித்துச் சீனர்கள் நாகரிக வாழ்வு வாழக் கற்றுக் கொடுத்தான்.

அத்துடன் இந்த மன்னனுடைய மனைவிதான் முதன் முதலில் பட்டுப் பூச்சியிலிருந்து நூலெடுத்து அதன்மூலம் ஆடை நெய்யும் வழியைக் கண்டுபிடித்தாள். அப்போதிருந்த மக்கள் அவர்களைப் போற்றி வந்தனர். பின்னர் ஆட்சிபீடம் பலர் கைக்கு மாறி மக்

களை வாட்டித்தான் வதைத்தது. அந்தச் சமயங்களில் சில பெரியோர்கள் தோன்றினர். அவர்களில் முக்கிய மானவன், கன்பூஷியஸ் என்பவன். இவர் கி.மு. 551ஆம் ஆண்டு பிறந்தவன். இளமையில் வறுமையில் உழன்ருன். தந்தையை யிழந்து அனாதையானுன். கஷ்டப் பட்டுக் காலம் தள்ளி வந்தார்.

அவனுடைய பத்தொன்பதாம் ஆண்டில் மணம் புரிந்து கொண்டான். அவன் செய்துவந்த தொழிலில் ஒழுங்கு இல்லாததால் வெறுப்படைந்து ஒரு பள்ளிக் கூடம் வைத்து நடத்தினுன். பிள்ளைகளுக்கு ஒழுக்கத் தைப் பாடமாகப் போதித்தான்; உண்மையைக் கடைப் பிடிக்கும்படி கட்டளை யிட்டான். இவன்மீது பற்றுக் கொண்டு அனைவரும் இவன் பள்ளிக்கே பிள்ளைகளை அனுப்பினர். இவன் புகழ் மணக்கலாயிற்று. அப்போது நேர்ந்த திடீர் மாற்றத்தால் அரச சிம்மாசனம் கைமாறி யது. ஆனுல் ஆட்சி பீடமேறிய அரசன் கன்பூஷியஸை நன்கு மதித்து அவனுக்கு பிரதம நீதிபதி உத்தியோகம் தந்தான். பின்னர் முதன் மந்திரியாக்கிக் கொண்டான். இவன் மந்திரியானதும் மக்களுக்கு நன்மை செய்வதில் ஈடுபட்டான். ஏழைகளுக்காக இரங்கினுன். ஆனுல் பணக்காரர்கள் இவனை எதிர்த்தனர். நிலப் பிரபுக்கள் இவனை நிந்தனை செய்தனர். கன்பூஷியஸை ஒழித்து விடவும் சூழ்ச்சிகள் செய்தனர். அதன் பயனுக கன்பூஷி யஸ் மந்திரி பதவியைவிட்டு இறக்கப்பட்டான். வஞ்ச கர்கள் வாழும் நாட்டைவிட்டே வெளியேறி விட்டான்.

சீனுவில் அப்போது நியாயத்திற்கு இடமில்லாததால் நியாயப் பாதுகாவலனுன கன்பூஷியஸ் இருக்க இடம் தரவில்லை.

பின்னர் அவனுடைய அறுபத்தொன்பதாவது வயதில் தன் நாட்டிற்குத் திரும்பி வந்தான். தன் சீடர்களுக்கு அறிவுரைகளைப் புகன்று வந்தான். அவன் வாழ்ந்தபோது அவனுடைய பெருமையை அறியவில்லை. பாவம்! மிகவும் கஷ்டப்பட்டுதான் இறந்தான். அவன் இறந்தபோது, அவனுடைய வயது எழுபத்து மூன்று! ஆனுல் அவன் இறந்த பிறகு அவனுல் இயற்றப்பட்ட நூல்களுக்கு பெரும் மதிப்பு ஏற்பட்டுவிட்டன. அவன் எழுதிய நூல்கள்தாம் உண்மையானவை என்று மக்கள் கருதினர். அந்த நூல்களைப் படித்தவர்கள் தாம் பாராளும் மன்றத்தில் பணியாற்றலாம். அவன் நூல்களைப் படித்தவன்தான் பெரிய மனிதன் என்னும் பெயர் பெற்ருன்.

அவன் தன் நூல்களில் என்ன எழுதியிருக்கிருன் என்பது உங்களுக்குத் தெரியவேண்டுமல்லவா? அவன் மதங்களைப் போற்றவில்லை; புதிய மதத்தையும் உண்டாக்க விரும்பவில்லை. அறிவுக்கும், கண்ணுக்கும் அப்பாற்பட்ட எதைப் பற்றியும் அவன் நினைக்கவில்லை. ஆனுல் இந்த உலகத்தையே சுற்றிச் சுற்றிப் பார்த்தான். மனிதப் பண்பை அறிந்தான். மனிதன் எப்படி வாழ வேண்டும் என்பதைப்பற்றிச் சிந்தித்தான். நடைமுறையில் கடைப்பிடித்து நடப்பதற்குரிய நல்ல வழிகளை

மக்களிடம் சொன்னுன். அது நல்லது என்று பட்டதால் மக்களே ஏற்றுக் கொண்டனர். அவன் ஒரு சிந்தனைப் பூங்கா; மக்கள் வழிகாட்டி! எவராலும் காண முடியாத கடவுளைப் பற்றி அவன் என்றுமே சொல்லவில்லை. ஆனல் அவன் மக்களிடம், "நண்பர்களே, நமது கண் முன்னர் நடமாடும் மக்களிடம் அன்பு காட்டாமல், அவர் களுக்குத் தொண்டு செய்யாமல், காணுத கடவுளிடம் அன்பு காட்டுவதாகவும், தொண்டு புரிவதாகவும் கூறுவது எப்படிச் சரியானதாகும் என்று சிந்தியுங்கள். இந்த உலகில் பிறந்தோம் இதில்தான் வாழ்கிறோம்; உலக விவகாரங் களில் கலந்து கொள்ளுகிறோம். ஆனல், திடீரென்று எனக்கு உலகம் வேண்டாம்; உலக வாழ்வு மாயை; நான் உலகைத் துறந்து விட்டேன் என்று கூறி உலகை உதறித் தள்ளி விடுவதற்கு என்ன பொருள்?" எனக் கேட்ட பேரறிஞன். அவனைச் சீனர்கள் என்றும் மறப்பதில்லை.

சீன அறிஞர்களையும் அதிகமாக உடைய நாடு தான். அவர்களில் சிலரை உங்களுக்கு அறிமுகப்படுத்தி வைக்கின்றேன். மோத்ஸே: இவன் ஒரு அறிவாளி. அவன் மக்களிடம்: "தோழர்களே! நீங்கள் உங்கள் குடும் பத்தினிடம் மாத்திரம் அன்புடன் இருந்தால் போதுமா? அதைப் போலவே உலக மக்களிடமும் உறவு கொள்ள வேண்டும். உங்களைப் போலவே உங்கள் நண்பர்களையும் நடத்துங்கள். எல்லோரையும் ஒரு கண் கொண்டு பாருங் கள்" என்று உபதேசம் செய்து தன் பெயரை நிலை நிறுத்திக்கொண்டான். மேலும் மோத்ஸே ஓரிடத்தில்

சங்கீதத்தைப் பற்றி, ''நீரின்மேல் செல்வதற்கு படகுகள் தேவை; தரையில் செல்வதற்கு வண்டிகள் தேவை; ஆனால் சங்கீதம் எதற்குத் தேவை? மக்களின் பசியைச் சங்கீதம் போக்குமா? குளிரால் நடுங்கும் மக்களின் நடுக்கத்தை நீக்க உதவுமா? அலுத்துப்போன மக்கள் ஓய்வின்றி கஷ்டப் படுகின்ற போது நாம் சங்கீதம் பாடிக்கொண்டிருந்தால் போதுமா? சங்கீதம் இவர்களுக்கு ஏதாவது உதவி செய்யுமா? பலவான்கள், பலஹீனர்களைத் தாக்கும் போதும்; வேற்று நாட்டான் படை திரட்டி வந்து நம்மீது பாயும்போதும், திருடர்கள் திருடிக்கொண்டிருக்கும்போதும் நாம் சங்கீதம் பாடினல், போய்விடுவார்களா? குழலால் தடுத்துவிட முடியுமா? வாத்தியங்களால்தான் நிறுத்திவிட முடியுமா?'' என்றும் கேட்டிருக்கிறன். இவன் ஒரு காரியவாதியாகவே இருந்தான்.

அடுத்தவன் ஹான்பை: இவன் புது வாழ்வை விரும்பிய புனிதன். சட்டத்திற்குமுன் அனைவரும் சமம் என்று கூறியவன். பழைமையைக் கண்ணை மூடிக் கொண்டு பின்பற்றுபவர்கள் முன்னேற்றம் அடைய முடியாது என்ற குரலை எழுப்பியவன். இவ்விதப் புதுக் கருத்துக்களை, புரட்சி எண்ணங்களை தைரியமாகக் கூறிய குற்றத்திற்காகச் சிறைபட்டு அங்கேயே உயிர் துறந்த உத்தமன்.

சைனு என்றும் ஒரே நிலையில் இல்லை. அரசர்களின் குணங்களுக்குத் தகுந்தவாறு ஆடிக்கொண்டிருந்தது. கன்பூஷியஸ் இறந்த இருநூறு ஆண்டுகளுக்குப் பின்

னர், நாடு ஒரே குழப்பம் அடைந்திருந்தது. ஒழுக்கம் கெட்டுக் கிடந்தது. அப்போது "மேன்ஷியஸ்" என்னும் ஒரு அறிஞன் தோன்றினன். அவன்தான் நாட்டின் நிலைமையைப் பரிசீலனை செய்தான். நாடு ஒழுக்கம் குன்றி இருப்பதை அறிந்து அந்த ஒழுக்கத்தை உப தேசிக்க விரும்பினன். அப்படி அவன் விரும்பியபோது அவன் கண்களுக்கு கன்பூஷியஸின் நூல்கள்தான் தெரிந் தன. அதன் துணைகொண்டு அந்த அறிவு மொழிகளை நாட்டு மக்களுக்கும், சிற்றரசர்களுக்கும் உபதேசிக்கத் தீர்மானித்தான். நாடு முழுவதும் சுற்றிச் சுற்றி கன்பூஷியஸின் அரிய சித்தாந்தத்தைப் பிரசாரஞ் செய்து வந்தான். சிற்றரசர்களின் ஆஸ்தான மண்டபங் களிலும் கன்பூஷியஸின் கருத்தைச் சொன்னன். ஆட்சி இவ்விதம் நடைபெற வேண்டும் என்று தொண்டை கிழியக் கத்தினன். ஆனல் அதை அவர்கள் காதுகள் ஏற்கவேயில்லை. கத்திக் கத்திக் கண்ட பலன் சாவுதான். தன் கடமையை உணர்ந்து செய்த அந்தக் கடமை வீரன் இறந்துவிட்டான். ஆனல் அவன் கடமைக்கு அன்றிருந்தோன் புகழ்மாலை சூட்ட மறந்தாலும், இன்று அந்தக் கடமை வீரனை மறக்காமல் போற்று கிறேம்.

அன்புடையவர்களே! என் வரலாற்றைச் சொல்லத் தொடங்கிய நான் என் தாய் நாட்டின் வரலாற்றை உங்களுக்குச் சுருக்கிச் சொல்லிக் கொண்டே வருகி

றேன். அதற்காக நீங்கள் வருத்த மடைய மாட்டீர்கள். ஆகவே மேலும் தொடர்கின்றேன்.

சீனாவை ஆண்டு வந்த "சௌ" வம்சம் தன்னுடைய கொடுங்கோல் ஆட்சியால் நாளுக்கு நாள் அழிந்துகொண்டே வந்தது. அப்போது கடைசியாக அந்த சௌ வம்சத்தை ஒரே அடியாய் அழித்துக் கட்டிவிட்டு சின் வம்சம் முடிசூடிக் கொண்டது. அந்த வம்சத்தின் முதல் மன்னன் சின்ஷி ஹுவாங் தீ என்பவன். இவன்தான் அப்போதைய முழுசீனாவிற்கும் ஏக சககரவர்த்தியாக முடிசூடிக் கொண்டான். அவன் தன்னை தெய்விகச் சக்கரவர்த்தி என்று அழைத்துக் கொண்டான். இவன் "சௌ" வம்சத்தினரின் அரச பீடத்தை ஆடாமல் அசையாமல் பிடித்துக் கொள்ளவில்லை. ஒரு தனி மனிதன் மன்னன் என்ற பெயர் சூடிக் கொள்வதற்கு ஏறக்குறைய பதினைந்து லட்சம் பேர் சிந்திய இரத்தத்தில் நீந்தி வந்துதான் அரியணையில் அமர்ந்தான். லட்சக் கணக்கான மக்களின் உயிர் துடிதுடிப்பின் மீது நடந்து வந்துதான் பட்டம் கட்டிக் கொண்டான். ஆனால் அவன் அதற்காகக் கடுகளவும் கவலை கொள்ளவில்லை.

அவன் காலத்தில் நிலச்சுவான்தாரர் ஆதிக்கம் தலைவிரித்தாடியதால் எங்கும் குழப்பங்கள் ஏற்பட்டுக் கொண்டே யிருந்தன. இதை நீக்குவதற்காக அந்த மன்னன் நிலச்சுவான்தாரர் ஆதிக்கத்தை நீக்கிவிட்டு நாட்டை முப்பத்தாறு மாகாணங்களாகப்

பிரித்து அதிகாரிகளை நியமித்தான். அதன் பின்னர் உள் நாட்டில் அமைதி நிலவியது. ஆனால் வெளி நாட்டார்கள் அடிக்கடி உள் நுழைந்து தொல்லை கொடுத்து வந்தார்கள். அவர்களைத் தடுத்து நிறுத்த இந்த மன்னன் சீனாவின் வடக்கு எல்லை முழுதும் ஒரு நீண்ட பெரிய சுவர் எழுப்பத் தீர்மானித்தான். அதன்படியே அவன் அதைச் செய்து முடித்தான். அதன் நீளம் ஏறக்குறைய ஆயிரத்து அறுநூறு மைல். இந்த மதிலைக் கட்டிமுடிக்க சுமார் மூன்று லட்சம் பேர் வேலை செய்தனர். சிறையில் அடைபட்டவரும், மன்னனின் வெறுப்புக்கு ஆளானவர்களும் இதில் வேலை செய்யக் கட்டாயப் படுத்தப் பட்டனர். இந்த மதில் தான் அந்த மன்னனை உலகம் மறக்காதவாறு செய்து விட்டது. சீனப் பெருஞ் சுவர் உலக அதிசயங்களில் ஒன்று.

இந்த மன்னன் தன்னுடைய முட்டாள் மந்திரியின் சொல்லைக் கேட்டு சீன நாட்டுப் பழைய நூல்களையெல்லாம் எரித்துவிட்டான். அப்படிச் செய்யாதவர்களுக்குக் கடும் தண்டனை விதித்தான்.

இந்த ஆடம்பர பிரியரான அரசன் தான் இறவா மருந்தருந்த ஆசைப்பட்டான். எவ்வளவோ முயன்றும் முடியாததால் மனமுடைந்து கி. மு. 210-ஆம் ஆண்டு ஆவி நீத்தான்.

அதன்பின்னர் பல வம்சங்கள் ஆண்டன. பின்னர் சீன அயல் நாடுகளாகிய இந்தியாவிடமும் ரோம்

நாட்டினிடமும் பழக்கம் ஏற்படுத்திக் கொண்டது. அப்போது ரோம் நாட்டை ஆண்ட **மார்க்கஸ் அரிலியஸ்** என்ற மன்னன் சீன மன்னருக்குப் பல சன்மானங்களை வழங்கினான். கி. பி. 65-ஆம் ஆண்டில் புத்த மதம் இந்தியாவிலிருந்து சீனாவுக்கு இறக்குமதியாயிற்று. அப்போது சீனாவை ஹான் வம்சத்தினர் ஆண்டு வந்தனர். இந்திய நாட்டு புத்த சந்நியாசிகள் புத்தரின் உருவச் சிலையையும் பௌத்த நூல்களையும் கொண்டு வந்து அப்போதைய மன்னனாகிய மிங் என்பவனைக் கண்டனர். பின்னர்ப் பௌத்தத்தைச் சீன மொழியில் இயற்றிப் பரவச் செய்தனர்.

உலகத்திலேயே முதன் முதலில் காகிதம் செய்யும் முறையைக் கண்டு பிடித்தும், அதை உபயோகிக்கத் தெரிந்ததும் எங்கள் சீனாதான். பின்னர் சாமான்கள் செய்து அதன் மீது அழகான சித்திரங்களை வரைந்து உலகை மகிழ வைத்ததும் சீனர்கள்தான் என்று நான் உங்களிடம் கூறும்போது, எனக்குப் பெருமையாகவே யிருக்கிறது. காகிதம் கண்டுபிடித்தவுடன், அதை அச்சடிக்கவும் கற்றுக் கொண்டனர். அன்றே சீனர்கள் தங்கள் வரலாறுகளை ஏடுகளில் எழுதி வைக்கவும் மறக்கவில்லை. இவ்வளவும் ஹான் வம்சம் ஆண்ட காலத்தில் ஏற்பட்டவை.

அந்த வம்சம் அழிந்த பிறகு, சீனா ஒரே குழப்பம் அடைந்திருந்தது. அப்போதிருந்த சிற்றரசர்கள் ஒருவரை ஒருவர் எதிர்த்துக்கொண் டிருந்தனர். அதனால்

சிதறுண்டு கிடந்த சீனுவை "தார்த்தாரியர்கள்" வெகு சுலபமாகக் கைப்பற்றிக் கொண்டதுடன் அவர்கள் சீன நாகரிகத்தையே கையாண்டு அதனுடன் கலந்து விட்டனர்.

இவ்விதம் குழம்பிக் கொண்டு, நாடு சின்னுபின்னப் பட்டுக்கொண்டிருந்த காலத்திலே தான் புத்தமதம் சீனு முழுவதும் பரவி மக்களை ஐக்கியப் படுத்தியது. அப்போது தெற்குச் சீனுவிலுள்ள லியாஸ் பிரதேசத்தை ஆண்டுவந்த மன்னன் வூ என்பவன். அவனுக்குப் புத்த மதத்தில் ஈடுபாடு அதிகம். அவன் பௌத்த நூல்களுக்கு உரை எழுதி யிருக்கிருன். அவன் அரசனுக இருந்தாலும் புத்தரைப்போல் வாழ வேண்டும் என்று கருதினுன். புத்த நெறிப்படி ஒருவேளை உண்பான். இறைச்சி முதலியவைகளை உண்ணமாட்டான். அவன் நாட்டில் பலியிடக்கூடாது என்று உத்தரவிட்டான். குற்றங்களுக்கு மரண தண்டனை விதிக்கக்கூடாது என்றும் தடுத்தான். பௌத்த மதத்தைப் பரப்பவே பாடு பட்டான். நாச காலர்கள் ஆண்டுவந்த காலத்தில் இந்த ஒரு நல்ல மன்னனும் ஆண்டு வந்தான்.

கி. பி. 608 ஆம் ஆண்டு டாங் வம்சம் ஆண்டது. அந்த வம்சத்தின் முதல் மன்னன் தைத்ஸுங். இவர்கள் கலைகளை வளர்த்தனர். அந்த வம்சம் ஆண்ட காலத்தில் தான் தேயிலை கண்டு பிடிக்கப் பட்டது. அதைப் பான மாக உபயோகப் படுத்துவதற்குரிய பீங்கான் பாத்திரங்கள் விதவிதமாக உண்டாக்கப்பட்டு அந்தத் தொழில்

விருத்தி அடைந்தது. இவர்கள் ஆண்டபோது கிறித்துவ மதம் சீனுவில் இறக்குமதி யாயிற்று.

அதன் பிறகு மங்கோலியர்கள் சீனுவின்மீது படையெடுத்தனர். அவர்களின் முதல்வன் ஜெங்கிஸ்கான் என்பவன். இவர்களுடைய பரம்பரையில் நல்லவர்கள் கிடையாது என்று கூறலாம். ஆனுல் அந்தக் குறையை குப்ளாய்கான் என்பவன் தீர்த்து விட்டான். இவன் சீன நாட்டுக்கு யுவான் என்ற பெயரைச் சூட்டினுன். அதற்குப் பெருந்தன்மை என்பது பொருள். தலைநகரைப் பீகிங்குக்கு மாற்றிக் கொண்டான். இவன் காலத்திலேதான் மார்க்கோ போலோ சீனுவிற்கு வந்தான். இவன் சீனுவுக்கும் இந்தியாவுக்கும் வழிகாட்டிப் பல நூல்களை எழுதி வைத்தான்.

மங்கோலிய வம்சத்தை ஒட்டிய மாவீரன் சூயுவான் சாங் என்பவன், கி.பி. பதினுேராம்நூற்றுண்டில் அரசாங்கத்தை எதிர்த்துத் தோன்றிய கட்சிகளுக்குத் தலைமை பூண்டு மத்திய சீனு முழுவதையும் கைப்பற்றிக் கொண்டான். நான்கிங்கைத் தலைநகர மாக்கிக் கொண்டான். அதன் பின்னர் மங்கோலிய ஆட்சி நடந்துகொண்டிருந்த பீகிங் நகரத்தின் மீது படை எடுத்தான். இவன் வரவைக் கண்ட மங்கோலிய வம்சத்துக் கடைசிக் கோழை மன்னன், தன் காமசுந்தரிகளுடனும், அந்தப்புர அழகிகளுடனும், துர் மந்திரிகளுடனும் மறுபடியும் அவர்களின் பழைய இடமாகிய மங்கோலியாவுக்கே

ஓடிவிட்டான். அவனுடன் சீனாவில் மங்கோலிய ஆட்சி ஒழிந்தது.

அதன் பிறகு 1368-ஆம் ஆண்டு முழுச் சீனாவுக்கும் சூயுவான்சாங்கே சக்ரவர்த்தியாக முடிசூடிக் கொண்டான். தன் பெயரை தைத்ஸு என்று மாற்றிக் கொண்டான். அவன் வம்சத்திற்கு மிங் வம்சம் என்று பெயர். அன்னியர் ஆட்சியில் அவதிப்பட்ட மக்கள் மனம் கொதித்திருந்தனர். அப்போதிருந்த நன்மை பயக்காத ஆட்சியை எதிர்த்து, அறிஞர்களும், மக்களும், போராடினர். எழுத்தாளர்கள் ஆட்சியின் கொடுமைகளை எழுதிக் கட்டினர். பேச்சு வல்லுநர்கள் மேடைகளில் அதிகார வெறிகொண்ட ஆட்சியைக் கண்டனம் செய்தனர். ஆனால் அந்த ஆட்சிப்பீடம் எதிர்ப்புக் காரர்களைச் சிறையில் அடைத்தனர் சித்திரவதை செய்தனர். தூக்குக் கயிற்றில் தொங்கவிட்டு வேடிக்கை பார்த்தனர். ஆனால் மக்கள் புரட்சியை அடக்கிவிட முடியவில்லை அந்தக் காலத்தில் சீனா உலகம் கண்டறியாத பஞ்சத்தைக் கண்டது. உணவுப் பொருள்கள் இல்லை. என்ன செய்வார்கள்? மரப்பட்டைகளை உண்டனர்; புற்களையும் மாடுகள் போல் மென்று தின்று தங்கள் பசியைத் தணித்துக் கொண்டனர். ஏன் ஏழை மக்கள் மண்ணையும் வாரி வாரி விழுங்கினர். இவ்விதமான கேவல நிலைமையில் மக்கள் வாடுவதைக் கண்டும் அந்த ஆணவக்காரர் மக்கள் துயரைப் பற்றிக் கடுகளவும் கவலைப்படவில்லை. கருணை காட்டவில்லை. மக்களைக் கஷ்டப் படுத்தாமலும்

விடவில்லை. ஈவு இரக்கம் இவைகள் இல்லாமல் மக்களிடம் அதிக வரிகளை அடித்துப் பெற்றனர். ஏன்? ஆட்சியாளர்கள் ஆடம்பர வாழ்வு நடத்த இதன் விளைவு மக்கள் பலர் கொள்ளைக் கூட்டத்தினராக மாறிக் கொள்ளை யடிப்பதும் அதைக் கொண்டு தங்கள் வயிற்றை நிரப்புவதுமாக மாறினர். அப்போதிருந்தது நாடு நாடுபோல் இல்லை. சுடுகாடுபோல் இருந்தது.

இத்துடன் நின்றுவிடாமல் ஒரு பக்கம் ஜப்பான் தாக்குகிறது. அடுத்த பக்கம் மஞ்சூரியர்கள் படையெடுத்துத் தொந்தரவு தந்தனர். அத்துடன் சில பயிற்சி பெற்ற கொள்ளைக் கூட்டங்களும் தாக்கும்.

இவ்வளவுக்கும் மத்தியில் லீ என்பவன் கலகக்காரர்களையும் கொள்ளைக் கூட்டத்தினரையும் ஒன்று திரட்டி அதற்குத் தலைமை தாங்கி அந்தப் படையை; சீனுவின் தலைநகரான பீகிங் மீது நடத்திச் சென்றான். மக்கள் துயரத்தைப் பற்றிக் கவலைப்படாத மன்னன். என்ன செய்ய முடியும்? கடைசியில் புரட்சிக்காரர்கள் அரண்மனைக்குள் நுழைந்து விட்டனர். மன்னன் அரண்மனையை விட்டு விட்டு அருகில் இருந்த ஒரு மலையை நோக்கி ஓடினான். அந்த மலையின் மீது நின்று பீகிங் நகரத்தைப் பார்த்தான். அது தீப்பிடித்து எரிந்து கொண்டிருந்தது. அதைக் கண்டு சகியாதவனாய் அவன் செய்த பல குற்றங்களுக்கும், கொடுமைகளுக்கும் அவனை அவனே தண்டித்துக் கொண்டான். எப்படி தெரியுமா? ஒரு மரத்தில் தூக்குப் போட்டுக் கொண்டு

உயிர் விட்டான் அந்த மன்னன். அவன் பெயர் சேங்த்ஸா.

அவனுக்குப் பின் லீ முடிசூடிக் கொண்டான். அவனும் நிலைக்கவில்லை. அவன் ஒரு படைத் தலைவனை மஞ்சுகள் கொட்டத்தை அடக்கிவிட்டு வருவதற்கு வடக்கே அனுப்பி யிருந்தான். அவன் மனைவி அழகி ஆகவே அவனை லீ மன்னன் அவளைக் கவர்ந்து வேறொருவனிடம் விட்டு வைத்திருந்தான். இந்தச் செய்தியை கேள்வியுற்ற வடக்கே சென்ற தளபதி என்ன செய்தான் தெரியுமா? போராடி விரட்டி அடிக்க வேண்டிய மஞ்சுகளைத் தன்னைப் பின் தொடர்ந்து வந்து பீகிங் நகரத்தை முற்றுகையிட்டு லீயை ஒழித்துவிட வேண்டினான். எதிரிகள் இந்த நல்ல சமயத்தை நழுவவிடவில்லை. உடனே மஞ்சுகள் பீகிங்கைத் தாக்கினார்கள். இந்த எதிர்பாராத தாக்குதலைக்கண்டு கலகலத்துப் போனான் லீ. மஞ்சுகள் அந் நகரத்தைக் கைப்பற்றினர் மிக எளிதாக. ஆனால் மஞ்சுகளுக்குத் துணை செய்த படைத் தலைவன் அரசனாக நினைத்தான். ஏமாந்தான். மஞ்சுகள் தங்கள் தலைவனுக்கே முடிசூட்டினர். இவ்விதம் மஞ்சு வம்சம் சீனாவின் அரச பீடத்தில் அமர்ந்தது. அவர்களுடைய தலைவன் ஷித்ஸா என்பவன் அரசனானான்.

நாட்டுப் பற்றும், இனப் பற்றும் இணைபிரியாத சீனர்கள் அன்னியராகிய மஞ்சு வம்சத்தின் ஆதிக்கத்தில் இருக்க விரும்பவில்லை. வெறுப்புடன் தான் ஆட்

சியை ஏற்றுக் கொண்டனர். ஏனென்ருல் அவர்களை எதிர்க்கும் சக்தி அப்போது அவர்களிடம் இல்லை.

* * *

அன்புடையவர்களே! சீக்கிரத்தில் என் வரலாற்றை உங்களுக்குச் சொல்லப் போகிறேன். அதற்கு இடையில் சொல்ல வேண்டிய சில முக்கிய விஷயங்களை மறைத்து விட்டுப் போக மனமில்லை. ஆகவே தொடருகின்றேன்.

* * *

சீனுவில் மஞ்சு அரசாங்கம் நிலைபெற்றதும், அது செய்த கொடுமைகள் சொல்லி முடியாது. சீனர்களுக்கு இருந்த பல உரிமைகளைப் பிடிங்கிக் கொண்டது. மஞ்சு வம்ச அரசனுன ஷித்ஸு ஓர் உத்தரவிட்டார். அஃதாவது, "சீனர்கள் இன்று முதல் தங்கள் தலைமயிரைக் கொண்டை போட்டுக் கொள்ளக் கூடாது. சீனர்கள் தங்கள் தலைமயிரை ஒற்றைப் பின்னலாக்கித் தொங்க விட்டுக் கொள்ள வேண்டும். அப்படிச் செய்யாதவர்களுக்கு, செய்ய மறுப்பவர்களுக்கு மரண தண்டனை" என்பது.

ஏன் இந்த உத்தரவை விதித்தான் என்ருல், சீனர்கள் ஒற்றைப் பின்னல் போட்டுத் தொங்கவிட்டுக்கொள்வது மஞ்சுகளின் அடிமைகள் என்பதின் அறிகுறியாம். இப்படிக் கருதினுன் அந்த மமதை கொண்ட மன்னன். ஆனுல் சீனர்கள் தங்களை அடிமைகள் என்று காட்டும் ஒற்றைப் பின்னல் போட்டுத் தொங்கவிட வில்லை. எங்

களை நாங்களே களங்கப்படுத்திக் கொள்ளமாட்டோம் என்று மறுத்து விட்டனர். இந்த உத்தரவைச் சீனர்கள் அனைவரும் எதிர்த்தனர் ஆனல் அவர்கள் வெற்றி பெறவில்லை. மன்னன் மக்களைப் பார்த்து, "தலை தேவையா? தலை மயிர் தேவையா?" என்று கேட்ட போது, "தலை மயிர்தான் வேண்டும்" என்று கூறிய எத்தனையோ தலைகள் தரையில் உருண்டன. இந்தப் பயங்கரச் சட்டத்தை அமல்நடத்த அரசாங்கப் படைகள் எல்லா இடங்களிலும் விரைந்து சென்றன. மக்களைக் கொன்று குவித்து இரத்த ஆற்றில் மிதந்து சென்று அந்த அடிமையின் சின்னமாகிய ஒற்றைப் பின்னல் உத்தரவை நிறைவேற்றினர் ஆட்சியாளர்கள். அதன் பின்னர்த் தான் சீனுவில் எங்குப் பார்த்தாலும் ஒற்றைப் பின்னல்கள் காட்சி யளித்தன.

அந்தக் கொடிய மன்னனுக்குப் பின்னர்ப் பலர் தோன்றினர். காங்ஹ்ஸி, சின்லூங் என்பவர்களும் அந்த வம்சத்தவர்கள் தான்.

காங்ஹ்ஸி நல்ல முறையில் ஆட்சி நடத்தினுன் என்றுதான் சொல்ல வேண்டும். அவனுடைய பேரன் தான் சின்லூங். அவன் சிறந்த அறிவாளி. கலைகளை வளர்த்தான். சீனப் பேரகராதி உண்டாக்கினுன்; புதிய கலைகளை ஏற்படுத்தினுன். ஆனல் இவனும் ஷஹ-வாங் மன்னனைப் போல் பழைய சுவடிகளை எரித்தான். பல நல்ல நூல்கள் தீயிடப் பட்டன. இவன் காலத்தில் ஒரு புரட்சி நடைபெற்றது. அதை "வெண்தாமரை" கட்சி

யினர் உண்டாக்கினர். இந்தப் புரட்சியை அடக்க முடியாமலே இறந்து விட்டான் சின்லுங் மன்னன்.

அந்தக் காலத்தில் தான் ஐரோப்பியர் பலர் சீனுவில் வியாபாரம் செய்ய வந்திருந்தனர். அன்றைய அரசாங்கம் தன்னை எதிர்க்கும் நாடுகளுடன் எதிர்த்து நிற்க முடியாமல் தத்தளித்துக்கொண் டிருந்தது. இது மக்களுக்கு வெறுப்பை உண்டு பண்ணியது?" நாங்கள் ஏன் அடிமையாய் இருக்க வேண்டும். எங்களை எங்கிருந்தோ வந்தவர்கள் ஆள வேண்டுமா? அவர்களுக்கு நாங்கள் அடங்கிக் கிடக்க வேண்டுமா?" என்ற கேள்வியை மக்கள் எழுப்பினர். இதன் விளைவுதான் பிரசித்தி பெற்ற தைப்பிங் கலகம் அப்போது இந்தக் கலகக்காரர்களுக்குக் கிறித்துவ மதம் உதவி செய்தது. கிறித்துவ மதத்தைப் பின்பற்றும் வஞ்சகன் ஒருவன் மக்களின் கிளர்ச்சியைத் தன் பக்கம் சாமர்த்தியமாகத் திருப்பிக்கொண்ட தல்லாமல்; எல்லோருக்கும் பைபிளைப் படித்துக் காட்டி அவர்களையும் தன்மீது அன்புடையவர்களாகவும், பக்தி விஸ்வாச முள்ளவர்களாகவும், செய்து கொண்டான். இவ்விதம் மக்கள் மனதில் இடம் பெற்றபின் ஒரு நாள் ஆவேசம் வந்தவன்போல் பாசாங்கு செய்து மூர்ச்சை யடைந்தவன்போல் நடித்து; பிறகு எழுந்தான். சுற்றி யிருந்தவர்களைப் பார்த்து, "நான் கிறித்துவர்களின் கடவுளைக் கண்டேன். அவர் என்னிடம் இனிமேல் எவரும் விக்கிரக ஆராதனை செய்யக்கூடாது என்றும் அப்படிச்செய்தால் அதிசீக்கிரத்தில்

இந்த உலகத்தையே கோபக்கனலால் எரித்துவிடுவேன்'' என்று கூறினார்'' என்றான். அத்துடன் நின்றானா? இயேசுநாதர் ஆண்டவனின் முதல் மகன் என்றும், தான் இரண்டாவது மகன் என்றும் பூலோகத்தில் கிறித்துவ சாம்ராஜ்ஜியத்தை ஏற்படுத்தவே என்னை இந்த நிலவுலகில் தோற்றுவித்தார் என்றும் கூறினான். அன்றிருந்த அறிவில்லாத மக்கள் அவன் நடிப்பை உண்மை என்று நம்பினர். அதன் பின்னர்த் தன் கட்சிக்கு ஆள் சேர்த்துக் கொண்டான். தன் கட்சிக்குக் கடவுள் கட்சி என்று பெயர் சூட்டினான். அதற்கு அவனே தலைவனானான். இவனை மக்கள் ஆதரித்தனர். அவர்களின் துணை கொண்டு தென் சீனாவில் க்வாங்ஸி மாகாணத்தைச் சேர்ந்த ஒரு சிற்றூரில் தனது ஆட்சியை நிலைநிறுத்திக் கொண்டான். அந்த இடத்திற்கு தைப்பிங் தீன் குவோ என்று பெயரிட்டான். அந்த நாட்டுக்கும் அவன்தான் அரசனானான். அவன் மக்களிடம், ''நான் மஞ்சுகளை ஒழித்து விட்டு இந்தப் பரந்த நிலப்பரப்பை ஆளவேண்டும் என்று கட்டளையிட்டு, எனது பரமபிதாவாகிய ஆண்டவரும், எனது அண்ணனான இயேசுநாதரும் என்னை இங்கு அனுப்பினார்கள். இது கடவுள் ராஜ்ஜியம்' என்று கூறினான். ஏற்கெனவே மஞ்சு அரசாங்கத்தை வெறுத்து வந்த மக்களுக்கு இவன்மீது நம்பிக்கை ஏற்பட்டது. மக்கள் படை திரண்டு சீனாவின் பல பாகங்களையும் கைப்பற்றி இவன் வசம் ஒப்படைத்தது.

அப்போது ஐரோப்பிய வல்லரசுகள் சீனாவுடன் பேரம் பேசிவந்த காலம். அதுநேரம் சீனா அரசாங்கம்

ஐரோப்பியர் உதவியை நாடி, கடவுள் ராஜ்ஜியத்தினர் கைப்பற்றிய நாடுகளைத் திரும்பவும் பிடுங்கிக் கொண் டது. அதன் பிறகு கடவுள் கட்சியின் மதிப்புக் குறைந்து விட்டது. அந்த இயக்கத்தின் தலைவன் இளைய தேவ குமாரன் "விஷம்" குடித்து இறந்துவிட வேண்டிய தாயிற்று. அவனுடன் கடவுள் ராஜ்ஜியம் காணுமல் போய்விட்டது.

இந்த இயக்கம் ஒழிந்த பின் சீன அரசாங்கம் பல மற்று இருந்தது; அரசாட்சியைக் கட்டிக் காவல்புரிய முடியாமல் தத்தளித்துக்கொண் டிருந்தது. அப்போது அந்த நாட்டை ஒரு பெண் சர்வாதிகாரம் செலுத்தி வந் தாள். யேஹோனவா என்னும் பெயருடைய இவள் மஞ்சுவம்ச மன்னன் வேன்த்ஸுங் என்பவனின் வைப் பாட்டி. மன்னன் இறந்ததும், அவனுடைய மகன் அர சுரிமை பெறவேண்டும். அப்போது அந்தப் பெண் குழந் தைக்கு ஐந்து வயது. ஆகவே அவள் பல சூட்சிகள் செய்து, பிறகு அவளே நாட்டை ஆளும் அதிகாரம் பெற்றுக் கொண்டாள். தன் பெயரையும் த்ஸுஹ்ஸி என்று மாற்றிக் கொண்டாள். இவளுடைய நல்லகாலம் இளவரசி முத்ஸுங் பத்தொன்பதாவது வயதில் இறந்து விட்டாள். அதன் பிறகு அவள் தன் சகோதரி யின் இரண்டு வயது மகளை அரசபீடத்தில் அமர்த்தி விட்டு அதிகாரத்தைத் தன் கையில் வைத்துக் கொண் டாள். அவள் செய்த அதிகாரம், ஆட்சிகள், சொல்லி முடியாது. இவளை மக்கள் வெறுத்தனர். கொலைக்காரி,

கொடுமை செய்பவள் என்பன மக்களிடம் இவள் பெற்ற பட்டங்கள்.

இவளை ஒழிக்கப் பல சதிகள் நடைபெற்றன. பல கலகங்கள் நிகழ்ந்தன. இவள் யாருடைய வாரிசாக ஆளுகிருளோ அவனையே கலகக்காரன் என்று குற்றம் சாட்டிச் சிறையில் அடைத்த கொடியவள். பாவம்! பதினோராண்டுகள் சிறையிலே சித்திரவதைப் பட்டு மாண்டு மடிந்தான் அவன். அவன் எப்படி இறந்தான் என்பது இரகசியமாகவே யிருந்தது.

அவன் இறந்த அன்று அவள் ஓர் அரசிளங் குமரனைச் சக்கரவர்த்தியாகப் பட்டம் சூட்டினுள் அவனுக்கு வயது மூன்று. அந்தச் சிறுவனுக்கு பட்டம் கட்டிவிட்டு, அவனுடைய தந்தையிடம் அரசாங்க அதிகாரத்தை ஒப் படைத்து விட்டாள். அந்த இளவரசன் பெயர் பூயி. இவ்விதம் அரச பொறுப்பை வேருெருவரிடம் ஒப்ப டைத்து விட்ட மறுநாள் அந்த ஆணவக்காரி, அரண் மனையில் இறந்து கிடந்தாள். அப்போது அவளுக்கு எழுபத்திமுன்று வயது. உலகப் பிரசித்தி பெற்ற பாக்ஸர் கலகத்திற்குக் காரணமாக இருந்தவள் இந்தப் பெண்தான்.

இவள் இறந்தவுடன் பூயி; ஹீவான்டுங் என்ற பெயருடன் ஆட்சி பீடத்தில் அமர்த்தப் பட்டான். ஆனால் அவன் ஆளவில்லை. த்ஹ ஹ்ஸி என்பவளுடன் மஞ்சு வம்சம் மறைந்து விட்டது. இவர்கள் முந்நூறு ஆண்டுகள் ஆண்டனர்.

## சீனுவில் ஐரோப்பியர் ஆதிக்கம்

ஐரோப்பியர்கள் சீனுவில் புகுந்ததற்கு முக்கிய காரணங்கள் இரண்டு. ஒன்று வியாபாரம்; மற்ருென்று கிறித்துவமதத்தை பரப்புதல். இவர்கள் முதன்முதலில் சீனுவில் நுழையப் பயந்தனர். மக்களிடம் மரியாதை யாகப் பேசியே வியாபாரம் செய்தனர். மக்களிடம் அன்புகாட்டியே மதத்தைப் பரப்பினர். இவ்வித மரியா தையை முதலாகக கொண்டு உள்ளே நுழைந்து விட்ட னர் அன்னியர். ஒரு சிலர் கிறித்துவக் கோலத்தைக் கலேத்து விட்டுப் புத்த சன்னியாசிகளின் உடைகளுடன் புகுந்து பின்னர்ப் புத்த சன்னியாசியாகிய உடையைக் கலேத்து விட்டுக் கிறித்துவப் பாதிரிகள் உடையை அணிந்து கொண்டனர். இவ்விதம் சீனமக்களிடம் அடங்கியும், பயந்தும் மரியாதை காட்டியும் வந்தார்கள்.

இப்படி வாழ்ந்து வந்தபோது போர்த்துக் கீசியர் தான் முதன்முதலில் சீனுவின் சட்டத்தை மீறினர். மக் களின் மனவெறுப்புக்கு ஆளாயினர். சீன அதிகாரி களின் உத்தரவையும் மீறினர். ஒரு சிறிய நிகழ்ச்சியை உங்களுக்குச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். ஒரு சீனன் போர்த்துகீசியர்களே ஏமாற்றி விட்டதற்காக, அவர்கள் ஆயுதங்களே ஏந்தியவண்ணம் அடுத்திருந்த கிராமத்திற் குச் சென்று கொள்ளே யடித்தனர். பெண்களேயும், பருவ மங்கைகளேயும் தூக்கிக்கொண்டு சென்றனர். இந்த எதிர்பாராத நிகழ்ச்சியால் சீனர்கள் வெகுண்ட னர். அவர்களின் கோபங் காரணமாக சுமார் எண்ணூறு

போர்த்துகீசியர்களின் உயிர் பிரிந்தது. முப்பத்தைந்து கப்பல்களுக்குமேல் தீக் கிரையாயின. இதன் விளைவா கச் சீனர்களுக்கு அன்னியர்களின்மீது பெருந் துவேஷம் உண்டாயிற்று. அன்னியர்களைத் தங்கள் நாட்டில் நுழைய அனுமதிக்கக் கூடாது என்று கருதினர்.

அதன் பிறகு மற்ற நாட்டுப் பொருள்களை வாங்குவ தில்லை என்று தீர்மானித்தார்கள். அன்னியர் தயவின்றி வாழ முடியும் என்று கருதினார்கள். முதன் முதலில் வெடி மருந்தைக் கண்டு பிடித்தவர்கள் சீனர்கள்தான். ஆனால் அதை அழிவு வேலைக்கு உபயோகிக்கவில்லை. திருவிழாக் காலங்களில் வெடித்து மகிழ்ந்தனர். இவ்வித எண்ணத்தில் சீனர்கள் இருந்தனர்.

சீனாவின் தயவின்றி வெளி நாடுகள் வாழ முடிய வில்லை மின்னல் வேகத்தில் உற்பத்தியாகும் மேல்நாட்டு இயந்திரங்களை விற்பனைச் செய்ய சீனாவை சிறந்த மார்க் கட்டாகப் பயன்படுத்தவே முனைந்தனர். அத்துடன் சீனாவின் பட்டும், தேயிலையும் மற்ற நாடுகளுக்குத் தேவைப் பட்டது. ஆகவே சீனாவின் மார்க்கட் கதவை எவ்விதத்திலும் திறந்து விடவேண்டும் என்று ஐரோப் பியர்கள் கருதினர். இதற்காக பிரிட்டன் மிகவும் பாடு பட்டது. எத்தனையோ பேரைத் தூதனுப்பியது. எவ்வ ளவோ பொருள்கள் மன்னனுக்குச் சன்மானமாக அளிக் சப்பட்டன. ஆனால் மன்னனின் மனக் கதவு திறக்கவே யில்லை. மிகவும் கட்டுத் திட்டத்துடன் தான் வியாபா ரம் செய்ய வேண்டுமே ஒழிய, கண்டவிடத்தில் சென்று

பணக்கொள்ளை யடிக்க அரசாங்கம் கடுகளவும் அனுமதிக்கவே யில்லை. தன் முழு சாமர்த்தியத்தையும் காட்டிப் பார்த்து தோல்வியடைந்த பிரிட்டன் ஒரு முடிவுக்கு வந்துவிட்டது. நியாயமான முறைகளையும், வஞ்சகமான முறைகளையும் கையாண்டு நமது வியாபாரத்தை நிலைநிறுத்த முடியாது. பலாத்காரத்தைதான் உபயோகப் படுத்த வேண்டும் என்று தீர்மானித்து விட்டது.

இஃது ஒரு பக்கம் இருந்தாலும், சீனுவைப் பாழாக்கியவர்கள் ஐரோப்பியர்கள்தான். 'சீனர்கள் அபினிப் பிரியர்கள்' என்று கூறுவது சரியல்ல! அபினி சீனர்கள் மீது திணிக்கப் பட்டது, மக்கள் மயங்கி அந்த மோகத்தில் ஆழ்ந்து விட்டனர். இவ்வாறு மக்களை மயங்கச் செய்த முதல் பெருமை யுடையவர்கள் போர்த்துகீசியர். அடுத்து டச்சுக்காரர்கள் பிரஞ்சுக்காரர்கள், அமெரிக்கர்கள்; சிறப்பாகச் சொல்ல வேண்டுமானுல் பிரிட்டிஷ் காரர்கள். இவர்கள் மக்களுக்கு மயக்கம் தரும் அந்த அபினியைப் பணத்திற்கு விற்றனர். நல்ல வியாபாரம் நடைபெற்றது. ஆனுல் அரசாங்கம் அதைத் தடுத்தது. அபினி விற்கவும் கூடாது என்று உத்தர விட்டது. இருந்தும் பயன் என்ன? கள்ளச் சந்தையில் அபினி விற்றது. கொள்ளை லாபம் பெற்று வியாபாரிகள் கொழுத்தனர். மக்கள் போதை யேறியவர்க ளாயினர். எனவே, அவர்களுக்கு அதன்மீது அவ்வளவு மதிப்பு ஏற்பட்டது. அரசாங்கம் அளிக்கும் தண்டனையைக்கூட ஏற்றுக்கொள்ளச் சம்மதித்தனர்களே அன்றித் தங்க

ளின் கெட்ட பழக்கத்தை நிறுத்திக் கொள்ளவில்லை. கடைசியில் ''அபினி'' சீனவில் இறக்குமதி செய்யக் கூடாது என்று உத்தரவிட்டது அரசாங்கம், ஆனல் அப் போதும் நிற்கவில்லை. கள்ளத்தனமாக இறக்குமதியாகி விலை விஷம்போலேறிக் கள்ள மார்க்கட்டுகளில் விற் பனை யாயின. இதனல் எவ்வளவோ பொருள் சீனவை விட்டு வெளியேறியது.

சீனவில் அபினியைக் கொடுத்துவிட்டு வெள்ளி நாணயங்களை வெள்ளையன் கொள்ளையடித்துக் கொண்டு போனதால் சீனவில் வெள்ளி நாணயங்கள் குறைந்து அதன் மதிப்பு உயர்ந்தது. நில வருமானம் அரசாங்கத் திற்குக் குறைந்தது. எல்லாவிவசாயிகளும் அபினிஉண்ட மயக்கத்தால் நிலங்களை கவனிக்கவில்லை. அதன் பிறகு அபினி பழக்க முடையவர்கள் ஒரு வருடத்திற்குள் நிறுத்திவிட வேண்டும் என்றும், அப்படிச் செய்யாவிட் டால் மரண தண்டனை விதிக்கப்படும் என்றும் கட்டளை பிறந்தது. பின்னர் அரசன் ஒரு திறமையுள்ள அதிகா ரியை நியமித்து அபினி இறக்குமதியைக் கட்டோடு ஒழித்துவிட்டு வர அனுப்பினன். அந்த அதிகாரி காண் டன் துறைமுகத்திற்கு வந்தான். தனக்குத் தேவை யான படைகளைச் சேகரித்துக் கொண்டான். அபினி வியாபாரிகளுக்கு ஓர் அறிக்கை வெளியிட்டான். அதில் நாங்கள் அன்னியருக்கு எவ்வளவோ நன்மை செய்திருக்கிறேம்; பட்டும், தேயிலையும், பணமும் தந் திருக்கிறேம். ஆனல் அவர்கள் விஷத்தைப் போன்ற

அபினியைக் கொண்டுவந்து கொடுத்து வெள்ளிக் காசு களைக் கொள்ளை யடிக்கின்றனர். அபினி இறக்குமதி செய்யக் கூடாது என்று தடுத்திருந்தும் கள்ளத்தனமாக இறக்குமதி செய்து மக்களைக் கெடுத்து வருகின்றனர். இனியும் அரசாங்கம் இவர்கள் செய்யும் அட்டூழியங் களை அனுமதிக்காது. ஆகவே அபினி வியாபாரிகள் மூன்று நாட்களுக்குள் தங்களிடம் வைத்திருக்கும் அபி னியை என்னிடம் ஒப்படைக்க வேண்டும். இல்லையேல் தக்க நடவடிக்கை எடுக்கப்படும்'' என்று விளக்கப்பட் டிருந்தது. ஆனால் அவர்கள் கேட்டார்களா? இல்லை! சாக்கு போக்குகள் சொல்லி வந்தார்களே ஒழிய அபி னியைக் கொடுக்க வில்லை. பிரிட்டன் தரமுடியாது என் றும்; அதனால் எங்களுக்குப் பெரும் நஷ்டம் ஏற்படும் என்றும் கூறிவிட்டது. பின்னர் அந்த அதிகாரி தன் படைகளை அன்னிய வியாபாரிகள்வாழும் அந்தப் பிரதே சத்தைச் சுற்றிலும் நிறுத்தி வைத்தான். என்ன செய் வார்கள் அன்னியர்கள்? தங்களிடம் இருந்த அபினியை அப்புறப்படுத்த முடியவில்லை. படைவீரர்களைத் தாண்டி செல்லவும் முடியவில்லை. வெளியிலிருந்து எவரும் அந்த பிரதேசத்துக்குள் வரவும் முடியவில்லை உணவுப் பொருள்கள் கிடைக்கவும் கஷ்டமேற்பட்டு விட்டது. தண்ணீர்கூடக் கிடைக்காத நிலைமை ஏற்பட்டுவிட்டது. கடைசியாக ஒவ்வொருவராகத் தங்களிடம் இருந்த அபினியை கொண்டுவந்து கொடுத்தார்கள். அதில் பிரிட்டன்தான் அதிகப் பெட்டிகளை வைத்திருந்தது.

மொத்தம் 20,283 பெட்டிகள். அதன் மதிப்பு ஒரு கோடி ரூபாய்.

அந்நியரிட மிருந்து கைப்பற்றிய அந்த அபினி யைக் கொண்டு மக்களுக்குப் பாடம் கற்பிக்க எண்ணிய அதிகாரி, கடற்கரை யோரத்தில் ஒரு பெரிய பள்ளம் தோண்டி அதில் அபினியைத் துண்டுத் துண்டுகளாக வெட்டிப்போட்டு அதன் மீது சுண்ணும்பு நீரை ஊற்றிக் கலக்கச் செய்தான். இந்தக் கலப்பினுல் அபினி கொதித் துக் கரைந்தது. அந்தச் சுண்ணும்பு கலந்த அபினி நீர் கடலில் போய்க் கலக்கக் குழாய்களைப் போட்டிருந்தான் அதன் மூலம் எல்லாம் கடல் நீரில் கலந்து விட்டது. அதன் பின்னர் அந்தப் பள்ளத்தைச் சுத்த நீர் கொண்டு கழுவி அதையும் கடலில் கலக்கச் செய்தான். ஏன் இப் படிச் செய்தான் என்ருல் கடலோரத்தில் இருப்பவர்கள் தான் அபினி கள்ளத்தனமாய் இறக்குமதி யாவதற்கு உபகாரம் செய்பவர்கள்; அவர்களுக்குப் பயம் உண்டு பண்ணத்தான். இந்த அரிய வேடிக்கையை மக்கள் கூட்டம் கூட்டமாக வந்து பார்த்தனர்.

அதன் பிறகு அந்நியர் அபினி கொண்டுவந்து விற்ருல், அவர்களுக்கு மரண தண்டனை விதிக்கப்படும் என்றும், மற்ற வியாபாரங்களை வழக்கம்போல் செய் யலாம் என்றும் பிரகடனப் படுத்திஞன் அந்த அதிகாரி. அவன் பெயர் லின்-த்-ஸேஷ்ஸு.

1839-ஆம் ஆண்டு ஹாங்காங் துறைமுகத்தில் ஒரு பிரிட்டிஷ் கப்பல் வந்து சேர்ந்தது. அதன் மாலுமி

கள் கரைக்கு வந்தனர். அவர்களுக்கும் சீனர்களுக்கும் கைகலப்பு நேர்ந்தது. இந்தச் சண்டையின் காரணம் குடிவெறியே யன்றி வேறல்ல. இந்தக் கைகலப்பில் ஒரு சீனன் இறந்துவிட்டான். அவன் மரணத்துக்குக் காரணமாயிருந்த மாலுமியைத் தங்கள்பால் ஒப்படைக்கும்படி சீன அரசாங்க அதிகாரிகள் பிரிட்டிஷ் அதிகாரிக்குக் கடிதத்தின் மூலம் கட்டளை பிறப்பித்தனர். ஆனால் பிரிட்டிஷ் அதிகாரிகள் மாலுமியை ஒப்படைக்க முடியாது என்றும், இறந்துபோன சீனன் குடும்பத்திற்கு நஷ்டஈடு கொடுத்து விடுவதாகவும் கூறிவிட்டனர். இதை லின் ஒப்புக்கொள்ளவில்லை. கோபங்கொண்டு இனிமேல் பிரிட்டிஷ் வியாபாரக் கப்பல் எதுவும் காண்டன் நகரில் பிரவேசிக்கக் கூடாது என்றும், சீனர்கள் பிரிட்டிஷாரோடு வியாபாரம் செய்யக் கூடாது என்றும் உத்தரவிட்டான். இதனால் கோபங்கொண்ட ஆங்கிலேயர்கள், சீனாவில் பிரிட்டிஷ் மார்க்கெட் நிலைக்க வேண்டுமானால், பலாத்காரத்தை உபயோகிக்க வேண்டும் என்று தீர்மானித்து விட்டனர். இதன் விளைவாக 1840-ஆம் ஆண்டு 540 பீரங்கிகளையும், ஆயிரக்கணக்கான போர் வீரர்களையும் தாங்கிக் கொண்டு பதினாறு யுத்தக் கப்பல்கள் காண்டனை நோக்கி வந்தன. இதை அறிந்த சீன அதிகாரி பிரிட்டிஷ் கப்பல்களை நாசமாக்க வேண்டும் எனறும்; பிரிட்டிஷ் மாலுமிகளைக் கைது செய்ய வேண்டும் என்றும்; அப்படிச் செய்பவர்களுக்கு நல்ல வெகுமதி தரப்படும் என்

றும் உத்தரவிட்டான். இதன் விளைவு சீனுவுக்கும், பிரிட்டனுக்கும் யுத்தம் ஆரம்பமாயிற்று. காண்டனில் பலத்துடன் சீனர்கள் நிற்பதைக் கண்ட பிரிட்டிஷார் வடக்கே சென்று யாங்க்ட் ஸீகியாங் நதியின் முகத் துவாரத்திலுள்ள கோட்டைகளைத் தாக்கினர். அந்தத் தாக்குதலைச் சீனர்கள் தாங்க முடியாமல் பின்வாங்கினர். பிரிட்டிஷார் சில தீவுகளையும், நகரங்களையும் கைப்பற் றிக்கொண்டனர். இந்தச் செய்தியைக் கேட்டுப் பீகிங் நகரத்து அரசாங்கம் பயந்துவிட்டது. அங்குக் கொலு வீற்றிருந்த அமைச்சர்கள் இந்தச் சண்டைக்குக் காரணம் லின் தான் என்று கூப்பாடு போட்டனர். அதன் விளைவு லின் அதிகாரத்தி லிருந்து நீக்கப்பட் டான். வேறு ஒருவன் நியமனம் பெற்ருன். அவனைப் பிரிட்டிஷாருடன் சமாதானம் செய்துகொள்ளும்படி அரசாங்கம் உத்தரவிட் டனுப்பியது. அவனும் சமாதா னம் கோரினுன். பிரிட்டிஷார் எளிதில் ஒப்புக்கொள்ளு வார்களா? அவர்கள், "ஹாங்காங் தீவை எங்களுக்குக் கொடுத்துவிட வேண்டும்; எந்த நிபந்தனையும் இல்லா மல் எங்கள் விருப்பம்போல் காண்டனில் வியாபாரம் செய்யும் உரிமை வேண்டும்; எங்களிட மிருந்து பறி முதல் செய்த அபினிக்கு நஷ்ட ஈடாக அறுபது லட்சம் டாலர்கள் தரவேண்டும். இப்படிச் செய்ய ஒப்புக் கொண்டால் சமாதானம் என்றனர்.

அனுபவ மில்லாத அந்தப் புதிய அதிகாரி எவ்விதத் திலும் சமாதானம் செய்துகொள்ள வேண்டும் என்று

அரசாங்கத்தின் அநுமதி பெருமலேயே அதை ஒப்புக் கொண்டான். தற்காலிகமாய் யுத்தம் நிறுத்தப்பட்டது. இந்த விஷயம் அறிந்த அரசாங்கம் அந்த அதிகாரியின் தான்தோன்றித் தனத்தைக் கண்டித்து நிபந்தனையை நிராகரித்தது. உடனே மறுபடியும் யுத்தம் துவங்கி விட்டது. பிரிட்டிஷார் காண்டன், அமாய், ஷாங்காய் முதலிய துறைமுகப் பட்டினங்களைக் கைப்பற்றிக் கொண்டனர். சீனுவுக்கு உயிர்ச் சேதமும், பொருள் சேதமும்தான் லாபம். பிரிட்டிஷார் யாங்ட்ஸீகியாங் நதிக்குள்ளேயே யுத்தக் கப்பல்களைச் செலுத்திக் கொண்டு வந்துவிட்டனர். நான்கிங் நகரத்திற்கும் ஆபத்து நெருங்கிவிட்டது. என்ன செய்வார்கள் சீனர் கள்? நான்கிங்கில் உடன்படிக்கை செய்துகொண்டனர். இதுதான் நான்கிங் உடன்படிக்கை. மிகமிக மோசமாகத் தங்களைத் தாங்களே கேவலப் படுத்திக்கொள்ளும் அள வுக்குத் தங்களுக்கு இருந்த அதிகாரத்தை எழுதிக் கொடுத்துவிட்டது சீனு. எல்லா வல்லரசுகளுக்கும் அடங்கி நடக்க வேண்டிய அளவுக்குச் சீனு வந்துவிட் டது. யார் எதைக் கேட்டாலும் கொடுத்துவிட வேண் டிய அளவுக்குச் சீனு கீழ் நோக்கிச் சென்றுவிட்டது.

அபினிப் போர் சீன அரசாங்கத்தைப் பொம்மை யரசாங்க மாக்கிவைத்த நான்கிங் ஒப்பந்தத்தில் முடிந் தது. அதன் பின்னர் அந்நியர் சும்மா இருப்பார்களா? ஒன்றுக்கு மூன்று மடங்கு அதிகமாக அபினி இறக்கு மதி யாயிற்று. அத்துடன் சீனர்களை வேலைக் கமர்த்துவ

தாகக் கூறி ஆயிரக் கணக்கானவர்களைக் கப்பலில் ஏற்றிக்கொண்டு தென் அமெரிக்காவில் தோட்ட முத லாளிகளுக்கு விற்றனர். இதில் தரகர்களுக்கு அதிக இலாபம் கிடைக்கவே, சீனர்கள் கூட்டம் கூட்டமாக ஏற்றுமதி செய்யப் பட்டனர். தன் மக்களை ஆசை வார்த்தை காட்டிக் கப்பலேற்றிக்கொண்டு போய் மாடு களைப்போல் விற்பதைக் கண்டு சீன அரசாங்கம் கோபங் கொண்டது. ஆனால் என்ன செய்வது! அந்த ஆத்திரம் மனதிலே ஆறுமல் இருந்துகொண்டே வந்தது.அன்றியும் அந்தக் காலத்தில் சீனக் கப்பல்களைக் கொள்ளை அடிக்கும் கொள்ளைக் கூட்டத்தினர் கடலி லேயே தோன்றி சீன வியாபாரக் கப்பல்களைத் துன் புறுத்தினர். ஆதலால் சீனர்கள் அன்னியர்களுடைய உதவியை நாடினர். ஆனால் அவர்கள் சீன வியாபாரக் கப்பல்களுக்கு உதவியாக வருவதற்குரிய பணம் கேட் டனர். அவர்களும் கொடுத்து அன்னியர் பாதுகாப் பைப் பெற்றனர். ஆனால் பண ஆசை கொண்ட அன் னியர் அதிகப் பணம் கொடுக்க வேண்டும் என்றும், இல்லையென்றால் உதவி செய்ய மாட்டோம் என்றும் கூறிவிட்டனர். அவர்கள் கூறியது கொள்ளைக் கூட்டத் தினருக்கு ஆதரவு தருவதுபோல் சீனர்களுக்குப் பட்டது. இதை அறிந்த சீன அரசாங்கத்தின் மனம் வேதனை யடைந்தது. வேண்டாத விருந்தினர்களைப் போல் வந்து தங்களை நிலைநிறுத்திக் கொண்டதுடன், சீனாவின் உரிமைகளைச் சின்னாபின்னப் படுத்திக்கொண்

டிருந்தனர். அடிக்கடி சீனு தங்களைச் சரியான முறையில் நடத்தவில்லை என்று புகார் கூறினர். நான்கிங் ஒப்பந் தத்தைப் பரிசீலனை செய்ய வேண்டும் என்று வற்புறுத் தினர். அப்போது ஒரு சம்பவம் நிகழ்ந்தது. ஒரு பிரிட் டிஷ் கப்பல் சில கொள்ளைக்காரர்களுடனும், கள்ளச் சரக்குகளுடனும் காண்டன் துறைமுகத்திற்கு வந்தது. அதைக் கண்டுபிடித்து விட்டனர் சீனத்து அதிகாரிகள். சிலரைக் கைது செய்தனர். கப்பலின்மேல் பறந்து கொண் டிருந்த பிரிட்டிஷ் கொடியை இறக்கினர். இந்தச் செய்தி தெரிந்த பிரிட்டிஷ் அதிகாரிகள் "கைது செய்தவர்களை உடனே விடுதலை செய்ய வேண்டும்; கொடியை இறக்கிய குற்றத்திற்காக உத்தியோக முறையில் மன்னிப்புப் பெறவேண்டும்" என்று காண் டன் மாகாணத்து அதிகாரிக்கு அறிவித்தனர். ஆனுல் அந்தஅதிகாரி பதில் சொல்லவில்லை. உடனே பிரிட்டிஷ் பீரங்கிகள் காண்டன் நகரைத் தாக்கின. இதைக் கண்ட நகரவாசிகளுக்கு ஆத்திரம் பொங்கிற்று. கலகம் கிளம் பியது. அன்னியர்களின் வியாபார நிலையங்கள் எரிந் தன. நகரில் நாசவேலை தாண்டவ மாடிற்று. பிரிட்டிஷ் காரர்களும் சீனர்களின் நிலையங்களை எரித்தனர். எங்கும் ஒரே கலவரமாய் இருந்தது. பிரஞ்சுக்காரர்களின் பொருள்களும் சேதப் பட்டன. இதையே சாக்காக வைத்துக்கொண்டு பிரஞ்சுப் போர்ப் படை யொன்றும் காண்டனை நோக்கி வந்தது. இந்த இரு தேசத்தினரும் வெற்றி பெற்றுக் காண்டனில் நுழைந்தனர். அந்த நகர அதிகாரி கைது செய்யப்பட்டான்.

இதன் விளைவு சீன அரசாங்கத்திடம் மிஞ்சி இருந்த சில உரிமைகளும் பறிபோயின. அபினி தாராள மாக இறக்குமதி யாயிற்று. அத்துடன் அபினி உற்பத்தி சீனுவிலேயே ஏற்பட்டு விட்டது. எந்த நாடு எதைக் கேட்டாலும் கொடுத்துவிட வேண் டும்; இல்லை என்ருல் அவர்களை அவமதித்த குற்றத்திற் காக மற்ற நாடுகளும் சேர்ந்து சீனுவைத் தாக்கும். இதற்குத் தான் டீண்ட்ஸின் ஒப்பந்தம் என்று பெயர்.

இந்த ஒப்பந்தத்திற்குப் பிறகு சீன அரசாங்கம் படுமோசமான நிலையை அடைந்தது. பாதிரிமார்கள் கிறித்துவ மதத்தை வற்புறுத்தியும் பலாத்காரமாகவும் புகுத்தினர். சீனர்களை அநாகரிகச் சின்னங்கள் என்றும் கூறினர். அவர்களுக்கு நாகரிகத்தைக் கற்பிக்கவேதாம் வந்திருப்பதாகப் பறை யடித்துக் கொண்டு சீனர்களை இழிவு படுத்தித் தைரியமாகப் பேசி வந்தனர் நாகரிகத் தின் முதல்வர்களாகிய சீனர்கள் அவர்களை வெறுத் தனர். இருந்தாலும் அடங்கிக் கிடக்கவேண்டியே வந் தது. இல்லை யென்ருல் எங்கள் பாதிரிகளைக் கேவலப் படுத்தினீர்கள் என்ற குற்றத்தை ஐரோப்பிய நாடுகள் சீனுவின்மீது சுமத்திவிடும். எத்தனை நாள்தான் பொறுத்துக் கொள்வது. 1870 ஆம் ஆண்டு அன்னியர் கள் செய்த-கிறித்துவப் பாதிரிமார்கள் செய்த அட்டூழி யங்களைத் தாங்க முடியாமல் ஒரு கலகம் தோன்றியது. அதனுல் பல கிறித்துவப் பாதிரிமார்களின் சொத்துச் சேதம் அடைந்தது. பலர் உயிரிழந்தனர். ஆனுல் குற்

றம் செய்தவர்கள் என்று கருதப்பட்ட சீனர்களுக்கு மரண தண்டனை விதிக்கப் பட்டது. அத்துடன் திருப்தி அடையவில்லை அந்நியர்கள். சீனு செய்த குற்றத்திற்காக நஷ்ட ஈடு கேட்டது. அத்துடன் மண்டியிட்டு மன்னிப்பும் கோர வேண்டும் என்றும் பணித்தது. என்ன செய்ய முடியும் அரசாங்கத்தால்? மன்னிப்புக் கேட்டுக் கொண்டது. ஏறக்குறையப் பத்து லட்சம் ரூபாய் நஷ்ட ஈடும் கொடுத்தது.

ஆனால் அந்நியர்கள் திருப்தி அடையவில்லை. சீனுவின் கொட்டத்தை இன்னும் அடக்க வேண்டும் என்று கருதி எல்லோரும் சீனுவைக் குறைகூறியே வந்ததோடல்லாமல் அடிக்கடி நஷ்ட ஈடும் பெற்றுக் கொண்டே வந்தனர். வலுவிழந்த சீனு வகையின்றிக் கெட்டுக் கொண்டேயிருந்தது. சீனுவில் தோன்றும் கலகத்தை அடக்குவதாகச் சொல்லிக் கலகத்தை அடக்கிவிட்டு ஒவ்வொரு நாடும் சீனுவின் ஒவ்வொரு பாகத்தையும் ஆக்கிரமித்துக் கொண்டது.

அந்தச் சமயத்தில் சீனுவுக்கு நண்பர்கள் எவரும் இல்லை. ருஷ்யா வடக்கே நின்று சீனுவை நெருக்கி வந்தது. ஜெர்மனி சீனுவின் ஆதிக்கத்துக் குட்பட்ட ஸ்வாடோவின் மீது படையெடுத்து வந்தது. ஜப்பான், லூச்சூத்தீவுகளைத் தன் வயப்படுத்திக்கொண்டது. இங்கிலாந்து ஹாங்காங்கைப் பிடித்துக் கொண்டது. அத்துடன் சீன மக்கள் வாழ்வைக் குட்டிச்சுவராக்கும் அபினியை அளவுகடந்து திணித்தது. சீனுவின் ஏகாதியத்தியத்தைச்

சிறு சிறு துண்டுகளாக்கிக் கூறு போட்டுக்கொண்டிருந்தது. பிரான்ஸ். அமெரிக்கா தன்னுடைய நாட்டில் சீன மக்களுக்கு எந்த உரிமையும் கிடையாது என்ற சட்டத்தைப் பிறப்பித்தது. இவ்விதம் அளவுக்கு அதிகமான அட்டூழியங்களைச் செய்து சீன மக்களின் துவேஷத்தை நாளுக்குநாள் அதிகமாகப் பெற்றுக்கொண்டே வந்தனர் அந்நியர்.

ஜப்பான் சீனுவின் கிழக்கேயுள்ள சிறிய தீவு. ஜப்பானின் முன்னோர்கள் சீனுவிலிருந்து சென்றவர்கள், ஜப்பான் எழுதப் பேசக் கற்றுக் கொண்டதும் சீனுவிடம்தான். ஜப்பான் தன் நாடே யன்றி வேறென்றும் தெரியாமல் வாழ்ந்து வந்தது. ஆனுல் கொஞ்சகாலத்தில் அது மின்னல் வேகத்தில் வளர்ச்சி பெற்றது. பெற்ற தாயிடம் கற்ற வித்தையைக் காட்டுவது போல் சீனு வலுவற்றுக் கிடந்த நேரத்தில் அதற்கு அதிகமான தொல்லைகள் தந்தது;ஜப்பான் சீனுவிடமிருந்து எத்தனை நாடுகளை ஆக்கிரமித்துக் கொண்டது; வீணுக எத்தனை முறை போர் தொடுத்தது; எத்தனை ஒப்பந்தச் சீட்டுகளைக் காட்டிக் கையொப்பம் பெற்றது என்பதைச் சொல்லி முடியாது. இருந்த இடம் தெரியாமல் கிடந்த ஜப்பான் மிக விரைவில் ஏகாதிபத்திய வல்லரசுகளுக்கு சரிநிகர் சமானமாக நின்றது. சீனுவை மற்ற நாடுகளைப் போல் சுரண்டியது. சீனுவின் முன் எந்த வல்லரசும் எவ்வித ஒப்பந்தத்தை நீட்டினுலும், நஷ்டயீடு கேட்டாலும், அது முடியாது என்று சொல்வதில்லை.

செல்வாக்கு பிரதேசங்கள் என்ற பெயரால் தென் சீனுவைப் பிரான்சும், மத்தியசீனுவை பிரிட்டனும்;வட சீனுவை ஜெர்மனியும், மஞ்சூரியாவை ருஷ்யாவும், பங்கு போட்டுக் கொண்டன. இந்த நிகழ்ச்சிகள் பத்தொன்பதாவது நூற்ருண்டில் நடைபெற்றவை. வியாபார நோக்கத்துடன் எல்லா ஐரோப்பியரும் சீனுவுக்குள் நுழைந்து தங்களை நிலையாக நிறுத்துக்கொண்டு சொந்த முதல் போட்டுத் தொழில் நடத்தும் அளவுக்கு முன்னேறிவிட்டனர்.

பத்தொன்பதாம் நூற்ருண்டின் இடைக்காலத்தில் சீனுவின் பலவீனம், சீன மக்களுக்குப் புரிந்தது. அசர பீடத்தில் அமர்ந்திருக்கும் மஞ்சு அரசாங்கத்தை நம்பியிருந்தால் நாம் கடுகளவும் முன்னுக்கு வரமுடியாது. என்பதை நன்கு உணர்ந்து கொண்டனர். நேற்றுப் பிறந்த சிறிய நாடாகிய ஜப்பானிடம் தோல்வி யடைந்தது குறித்துச் சீனர்கள் மிகவும் வருத்தப் பட்டனர். அந்நிய நாட்டுப் பொருள்கள் சீனுவில் மலைபோல் குவிந்தன. அந்நியர்கள் தங்கள் சொந்த முதல்போட்டு புதிய தொழிற் சாலைகளை உற்பத்தி செய்துவிட்டனர். இதனுல் சொந்த நாட்டுத் தொழில் நசித்துப் போய்விட்டது. அபினி வியாபாரம் மிகவும் ஜரூராக நடந்து கொண் டிருந்தது. மக்கள் அபினி மயக்கத்தில் தங்களையே மறந்து விட்டனர். உலகின் பல பாகத்திலும் இருந்த வறுமை அவர்களால் துரத்தப்பட்டு சீனமக்களிடம் வந்து தஞ்சம் புகுந்துக் கொண்டது. ஆனுல்

இந்த கஷ்டங்களை நீக்க மஞ்சு அரசாங்கம் கொஞ்சமும் முயலவில்லை. இதனால் மக்களுக்கு மஞ்சு அரசாங்கத்திடம் இருந்த நம்பிக்கையே ஒழிந்து விட்டது. பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் ஐரோப்பா சகல வசதிகளுடனும் நாளுக்கு நாள் வளம் பெற்று வாழ்ந்துக் கொண்டே வந்தது. ஆனால் சீனா எல்லா வசதிகளையும் நாளுக்கு நாள் இழந்து கொண்டே வந்து கடைசியில் தன் உயிரை விட்டுவிட மனமில்லாமல் பிடித்துக்கொண் டிருந்தது.

"இவ்விதம் ஐம்பது வருடங்களாக மிக மிக முட்டாள்தனமாகக் காலத்தைக் கழித்த நாடு உலகிலேயே சீனா ஒன்றுதான். இதற்குக் காரணம் அன்றைய ஆட்சியாளர்களின் ஆணவமும், சோம்பேறித் தனமும்தான். பழைமையை விரும்பிக் கொண்டு பழைய புராணங்களைப் படித்துக்கொண் டிருப்பதிலேயே தங்கள் கவனத்தைச் செலுத்தினார்களே ஒழிய புதுமை எண்ணங்களைப் பற்றி நினைப்பதில்லை. மற்றவர்களையும் நினைக்க விடுவதில்லை. கல்வி நிலையங்கள் இல்லை. எதிர்காலத்தை உணர்ந்துப் பார்க்கும் சக்தியும் இல்லை. அதனால் அன்றைய சீனாவுக்கு அழிவுப் பாதையை நோக்கிச் செல்வதைத் தவிர வேறு வழியே தெரியவில்லை" என்று அறிஞர்கள் எல்லாம் கண்ணீர் விட்டுக் கதறினார்கள். இவ்வளவு பிற்போக்குச் சக்திகள் மூலைக்கு மூலைத் தோன்றி நாளுக்குநாள் வேகமாக வளர்ந்துக் கொண்டே வந்தன.

* * *

அன்புடையவர்களே! உங்களுக்குச் சொல்லவேண்டிய அளவு என் நாட்டைப்பற்றிச் சொல்லி விட்டேன். இனிமேல் என்னைப் பற்றி சொல்லப் போகிறேன். நான் யார்? ஏன் என் தலையை மஞ்சு அரசாங்கம் கேட்டது? என்ற விஷயங்கள் இனிமேல் தான் வரப்போகிறது. கவனமாய்க் கேளுங்கள்.

*   *   *

நான் ஒரு விவசாயக் குடும்பத்தில் பிறந்தவன். என் தந்தை மண்ணை நம்பி மழையை நம்பி வாழ்ந்தவர். என் தந்தைதான் எங்கள் வம்சத்தின் முதல் கிறித்துவர். சீன நாடு சின்னுபின்னமாய், கீழ் நிலையை நோக்கி வேகமாய் ஓடிக்கொண்டிருந்த நேரத்தில்தான் நான் பிறந்தேன். சரியாகச் சொல்ல வேண்டுமென்றுல் 1866 ஆம் ஆண்டு நான் அவதரித்தேன்.

நான் சிறுவனுய் இருந்தபோது எனக்கு யார் எதைச் சொன்னுலும் நம்பும் புத்தி யிருந்ததில்லை. ஏன்? எதற்கு? என்ற கேள்விகளைக்கேட்டுத் தெரிந்துக்கொள்ளவே என் மனம் விரும்பியது. அத்துடன் நாட்டுப் பற்றும் உரிமை வாழ்வுபெறுவதில் ஊக்கமும் எனக்குப் எவரும் போதிக்காமலே என் நெஞ்சில் எழுந்தது. சிறு வில் சிறுவயதில் அதிகமாக இல்லை என்றுலும் எனக்கு பன்னிரண்டு வயது இருந்தபோது நான் அமெரிக்காவுக் கருகிலுள்ள ஹாவாய்த் தீவுக்கு அனுப்பப் பட்டேன். அந்தத் தீவிலுள்ள ஹோனேலூலுவில் படித்தேன். பாதிரிகள் தான் எனக்கு ஆதரவாய் யிருந்து கல்வி போதித்தனர். அப்போது எனக்கு ஆங்கில மொழியின்மீது

சற்று ஆசை ஏற்பட்டது. ஆகவே அதை நன்ருகப் படிக்க எண்ணி அதில் தேர்ச்சியும் பெற்றேன். அதன் பிறகு நான் என் தாய் நாட்டிற்குத் திரும்பினேன்.

ஹாங்காங் சென்று அங்கிருந்த வைத்தியக் கல்லூரியில் படித்தேன். 1892-ஆம் ஆண்டு டாக்டர் பட்டம் பெற்றேன். பின்னர் வைத்தியத் தொழில் நடத்த மாக்கோ தீவுக்குச் சென்றேன். அங்கு என் வைத்தியத் தொழிலை ஆரம்பித்தேன். அந்தச் சமயத்தில் தான் எனக்கு அரசியலில் ஈடுபட வேண்டும் என்ற எண்ணம் உதித்தது. அது நாளுக்கு நாள் வளர்ந்தது. நானும் அதில் ஈடுபட்டுத் தீவிரமாகப் பணியாற்ற முனைந்துவிட்டேன். அப்போதே-1892-ஆம் ஆண்டிலேயே நான் ஒரு கழகம் நிறுவினேன். பாழடைந்து வரும் சீனவைப் புதுப்பிக்க வேண்டியபடியால் அதற்கு "சீனர் மறுமலர்ச்சிக் கழகம்" என்ற பெயரிட்டேன். கிளைக் கழகங்களை, ஹோனேலூலுவிலும், ஹாங்காங்கிலும், அமெரிக்காவிலும் ஏற்படுத்தி, சீனவின் மறு மலர்ச்சிக்காக வெளி நாட்டுச் சீனர்களின் ஆதரவைத் தேடினேன். இந்தக் கழகத்து உற்பத்தியாளன் யார் என்று கேட்டால் எனது நண்பர்கள் "டாக்டர்-சன்-யாட்-சன்" என்று பெருமையோடு கூறுவர். தோழர்களே! அந்த பெயருடையவன் நான்தான்.

ஆட்சி செய்யும் மஞ்சுகள் அந்நியர்கள். ஆளப்படுபவர்கள் சீனர்கள். இந்த நிலையை நினைத்து நினைத்து வருந்தினேன். ஆண்ட இனம் அடிமைப்பட்டுக் கிடக்க

லாமா? வாழ்ந்த பரம்பரை மாற்ருனுக்கு வளைந்து கொடுக்கலாமா? என்றெல்லாம் எண்ணி எண்ணி ஏங்கினேன். நான் பிறந்த பொன்ஞட்டை எல்லா நாட்டினரும் சுரண்டலாமா? சொர்க்க பூமி சொகுசுக்காரர்களின் விளையாட்டு நிலமாகலாமா? என்று என்னையே நான் கேட்டுக் கொண்டேன். ஆளத் தெரியாத மஞ்சு அரசாங்கமே! உன் அழிவு காலத்தின் முதல்நாள்தான் சீனுவின் வாழ்வுக்கு முதல் நாள். ஆகவே மஞ்சு அரசாங்கம் ஒழிக! அன்னிய சுரண்டல்கள் அடியோடு ஒழிக! என்னும் அரிய கருத்துக்களை என்னைப் பின பற்றிய இளைஞர்களுக்கு எடுத்துக் கூறினேன். அவர்கள் அதனை ஏற்றுக் கொண்டனர். ஆகவே நான் அவர்களை ஒன்று திரட்டினேன். புரட்சி செய்ய விரும்பினேன். அந்தப் புரட்சிப் பாதை எனக்குப் புதியது தான். இருந்தாலும் நான் அதைப் பொருட்படுத்தவில்லை. அந்நிய ஐரோப்பியர்களின் சுரண்டலாலும், அந்நிய ஆட்சியான மஞ்சு அரசாங்கத்தாலும் 1895-இல் அதிகமாகப் பாதிக்கப் பட்டவர்கள் காண்டன் நகர மக்கள். ஆகவே புரட்சி விதையை விதைப்பதற்குப் பக்குவப்பட்ட இடம் காண்டன்தான் என்று தீர்மானித்தேன். எனது எண்ணத்தைக் காண்டன் வாசிகள் ஏற்றுக் கொண்டார்கள் கண்ணியத்துடன். எனது முதல் புரட்சி 9—9—1895 — ல் நடைபெற்றது. ஆனுல் அது வெற்றி பெறவில்லை. பெருந் தோல்வியையே தந்தது. என்ருலும் நான் துவண்டுவிடவில்லை. 1900-ஆம் ஆண்டில் மறுபடியும் புரட்சியை

ஆரம்பித்தேன். அதுவும் ஈடேறவில்லை. 1902-ல், 1904-ல் நான் துவக்கிய புரட்சிப் போராட்டங்களும் படுதோல்வியே அடைந்தன. என்றாலும் நம்பிக்கை ரேகைகள் என் உள்ளத்தை விட்டகலவில்லை. மேலும் புரட்சிக்கு மக்களை ஒழுங்கு படுத்திக்கொண் டிருந்தேன். ஏன் என் புரட்சிகள் படுதோல்வி அடைந்தன என்பதை நினைத்துப் பார்த்தேன். அப்போதுதான் எனக்குப் புரட்சி வெற்றிபெற வேண்டுமென்றால், ஒற்றுமையும், கட்டுப்பாடும் நிறைந்த ஸ்தாபனங்களும், ஒழுங்கான திட்டங்களும் இல்லாமல் புரட்சிக் கொடியை உயர்த்தக்கூடாது என்று பட்டது. அதனால் நான் சீனாவின் சுதந்திர உணர்ச்சியையும், இலட்சியத்தையும் மற்ற நாடுகளுக்குச் சென்று பறைசாற்ற வேண்டும் என்று திட்டமிட்டுக் கொண்டேன். சில சட்ட திட்டங்களை வகுத்துக் கொண்டேன். சீன அரசியல் எப்படி யிருக்கவேண்டும் என்பதையும் ஒருவாறு கணித்துக் கொண்டேன். பின்னர் ஜப்பானுக்குச் சென்று டோக்கியோ நகரில் தங்கினேன். சீனப் புரட்சி வாதிகள் பலரையும் ஒன்று சேர்த்தேன். ஓர் இரகசிய ஸ்தாபனத்தையும் உண்டாக்கி அதற்கு சுங்-கு வோ-டுங் - மேன்ஹூயி என்று பெயரிட்டேன். அப்போது எனக்குத் தெரியாது இந்த இரகசிய ஸ்தாபனம்தான் பெருமை பொருந்திய கோமிண்டாங் கட்சியாக மாறும் என்று. இந்தச் சங்கம் அதாவது கோமிண்டாங் கட்சி 1905-ஆம் ஆண்டு நிறுவப்பட்டது.

* * *

# கோமிண்டாங் கட்சி

கோமிண்டாங் கட்சி 1905-இல் நிறுவப்பட்டது. இதைத் தோற்றுவித்தவர், அன்றைய சீன சீர்திருத்தக்காரர்களின் தலைவரும், ஆயிரமாயிரம் இளைஞர்களின் இதயத்தில் இடம் பெற்றவரும், தோல்வியைக் கண்டு அஞ்சாதவரும், "எத்தனை முறை தோற்றாலும் பரவாயில்லை. ஆனால் நமது இலட்சியத்தைக் கைவிடக் கூடாது, முடியரசுக்கு முற்றுப்புள்ளி வைக்க வேண்டும். குடியரசு மலர வேண்டும்" என்று மக்களிடம் மார் தட்டிப் பேசி அதற்காகப் பாடுபட்டவருமான டாக்டர் சன்யாட்சன். அவரை சீனாவின் இளைஞர் உள்ளம் மட்டுமல்ல; உலக இளைஞர் கூட்டமும் மறவாது. சீனாவுக்குப் புரட்சி விதை தூவிய அவரைப் பற்றி உங்களிடம் பேசுவதற்கு முன் சில விஷயங்களை நினைவு படுத்த வேண்டும். டாக்டர் சன்யாட்சன் காலத்தில் அவரைப் போலவே சீர்திருத்த எண்ணத்துடன் வாழ்ந்தவர் காங் யூ வெய் என்பவர். அவர் சீர்திருத்தத்தைப் பெரிதும் விரும்பினார். மக்களிடம் சீர்திருத்தக் கருத்துக்களை எடுத்து விளக்கினார். ஆனால் எங்கள் சன்யாட்சனைப்போல் அரசாங்கத்தை எதிர்க்க முன் வரவில்லை. அதற்குப் பதிலாக அரசாங்கத்தில் ஓர் உயர்ந்த பதவியில் அமர்ந்திருந்தார். அப்போது அரசனாக இருந்த பலவீனனான தேத்ஸுங் என்பவனின் நட்பையும் பெற்றிருந்தான். அப்போது இவன் மன்னனிடம் இளைஞர்

இயக்கத்தின் வளர்ச்சியையும், சீர்திருத்தம் செய்ய வேண்டிய அவசியத்தையும் சொல்லிக்கொண்டு வந்தான். எங்கள் தலைவர் சன்யாட்சன் எங்கள் சார்பில் நாட்டில் அனேக சீர்திருத்தங்கள் செய்ய வேண்டும் என்று ஒரு மகஜர் தயாரித்துப் பீகிங் அரசாங்கத்திற்கு அனுப்பினார். ஆனால் அது மறுக்கப்பட்டது.

இளைஞர்களாகிய நாங்கள் எங்கள் எண்ணத்தை மஞ்சுஆட்சி அலட்சியம் செய்ததை எதிர்த்துப் போராடினோம். அரசனுக்கு ஊக்கமும், உற்சாகமும் உண்டாக்கினோம். அவனும் சீர்திருத்தங்கள் செய்வதாய் வாக்கு தந்தான். இதற்கு மத்தியில் உங்களுக்கு ஒருவிஷயத்தை விளக்கவேண்டும். அப்போது சீனாவில் இரு கட்சிகள் இருந்தன. ஒன்று இளைஞர் கட்சி, அடுத்தது முதியோர் கட்சி; இளைஞர் கட்சிக்குத் தென்னாட்டவர் கட்சி என்று பெயர்; முதியோர் கட்சிக்கு வடநாட்டுக் கட்சி என்று பெயர். தென்னாட்டுக் கட்சியினராகிய இளைஞர்கள் தென் சீனர்கள், ஏழைகள், அந்நியர்களோடு பழகி அவர்களுடைய உண்மைச் சொரூபத்தை நன்றாகத் தெரிந்து கொண்டவர்கள்; நாட்டுப் பற்றும் இனப் பற்றும் உள்ளவர்கள்; புதுமையை விழைபவர்கள்; உரிமை வேட்கை உடையவர்கள். ஆனால் வடநாட்டுக் கட்சிக்காரர்கள் பழமை விரும்பிகள்; பிடிவாதக்காரர்கள்; அந்நியர் முன் அடங்கிக் கிடக்கும் அடிமை மனப்பான்மை உடையவர்கள்; பணம் படைத்தவர்கள்; பதவிப்பிரியர்கள்; எதேச்சாதிகாரிகள்; அரசாங்கத்தின்

நிழலிலேயே ஆயுள் காலம் வரையிலும் இருக்க விரும்பு பவர்கள். இவர்கள் தேத்ஸுங் அரசனின் வைப்பாட்டி யாகிய ஆணவக்காரி த்ஸுஹ்ஸியை ஆதரித்தார்கள். இளைஞர்கள் தேத்ஸுங் மன்னனுக்கு உற்சாக மூட்டி ஞர்கள். இவ்விதம் நாடு இரண்டுபட்டது. அதில் நாங் கள் தென்னாட்டைச் சேர்ந்த இளைஞர் கட்சிக்காரர்கள்.

தேத்ஸுங் மன்னன் எங்கள் வேண்டுகோளை ஏற் றுக்கொண்டு நாட்டில் பல சீர்திருத்தங்கள் செய்தான். நாளுக்கு நாள் சீர்திருத்தங்கள் நாட்டிலே நடமாடுவ தைக் கண்டு மகிழ்ந்தோம். எங்கள் தலைவர் சன்யாட்ச னிடம் பெருமையோடு கூறுவோம். ஆனால் அவர், "அரச பரம்பரை இருக்கும் வரையில் எப்படி நாடு சீர்படும்?" என்றுதான் கூறிவந்தார். ஆனால் அது பொய்யாகப் போகவில்லை.

எங்களின் உற்சாகத்தால் உந்தப்பட்ட மன்னன், கொரியாவில் விசேஷ ஸ்தானீகனா யிருந்து இறந்த ராஜ தந்திரியும், ராணுவ நிபுணனுமாகிய யுவான்ஷிகா என்ப வனை அழைத்து அவனிடம் ராணுவ நிர்வாகச் சீர்திருத் தப் பொறுப்பை ஒப்படைத்தான். இந்த ராஜ தந்திரி யிடம் நாங்கள் உண்மையான நம்பிக்கை வைத்து எங் களின் இரகசிய அரசியல் திட்டங்களைச் சொன்னோம். அதில் ஒன்று, சீர்திருத்த வாதிகளுக்கு முட்டுக்கட்டை யாய் நிற்கும் த்ஸுஹ்ஸி என்பவளையும், அவளுடைய ஆலோசகனான ஜுங்லூ என்பவனையும் கைது செய்வது. நாங்கள் இனிமேல் எங்கள் திட்டங்கள் தங்கு தடை

யின்றி நடைமுறையில் வரும் என்று நம்பி யிருந்தோம். ஆனால் யுவான், எங்கள் திட்டத்தை அவனைவிடப்பெரிய அதிகாரியாகிய ஜுங்லூவிடம் தெரிவித்தான். அவ்வளவுதான்! என்ன நடந்தது தெரியுமா? மன்னன், சிறை செய்யப் பட்டார்! யார் சிறை செய்தது தெரியுமா? அவர் வைப்பாட்டிதான்! அத்துடன் நின்றாளா? அவளே சக்கரவர்த்தினி என்றும் பிரகடனப் படுத்திக் கொண்டாள். இனிமேல் ஆட்சிப் பொறுப்பை அவளே ஏற்று நடத்துவாள் என்றும் தெரிவித்து விட்டாள், எங்கள் சீர்திருத்தச் சட்டங்கள் நூறு தினங்கள்தான் நடைமுறையிலிருந்தன. அதன் பிறகு அரசி எங்கள் சட்டத்தைத் தூள் தூள் செய்தாள். சீர்திருத்த அறிக்கைகள் எல்லாவற்றையும் ரத்து செய்து விட்டாள். அவள் விருப்பப்படியே புதிய சட்டங்களை உண்டாக்கினாள். அப்போதிருந்த உத்தியோகஸ்தர்களை விலக்கி, அவள் விரும்பிய உத்தியோகஸ்தர்களை அமர்த்தினாள். எங்களுக்கு அதாவது சீர்திருத்தக் காரர்களுக்கு மரண தண்டனை, நாடுகடத்துதல், ஆயுள் தண்டனை, கொடும்சிறை இவைகள் விதிக்கப் பட்டன. அப்போது நாங்கள்பட்ட கஷ்ட நஷ்டங்களைச் சொல்லவே முடியாது. எங்கள் மதிப்புக்குரிய தலைவர். சன்யாட்சன் தலையை கொண்டு வருபவர்களுக்கு, அல்லது உயிருடன் பிடித்துக் கொடுப்பவர்களுக்கு வெகுமதி தருவதாக விளம்பரப் படுத்தியது மஞ்சு அரசாங்கம்.

* * *

## சன்யாட்சன்

தலையைக் கொண்டு வருபவர்களுக்கு, அல்லது-உயி ருடன் பிடித்துக் கொடுப்பவர்களுக்கு வெகுமதி தருவ தாக விளம்பரப் படுத்தியது மஞ்சு அரசாங்கம் என்று சொன்னே னல்லவா? அதற்குக் காரணம் நான் செய்த புரட்சித்தான். ஏன் புரட்சி செய்தேன்? ஆண்ட இடம் அன்னியரிடம் சிக்கிச் சிதைவதைக் கண்டு சகியா மல் புரட்சி செய்தேன். சீன நாட்டின் வரலாறுகளைப் படித்துப் பார்த்து எந்த முடி மன்னனும் மக்கள் வாழ வழி செய்ய வில்லை. மன்னர்கள் என்றால் மமதை கொண்டவர்கள் என்று பொருள் கொள்ளும்படி நடந்து கொண்டார்கள். அதனால் மன்னர் ஆட்சி ஒழிய வேண் டும்; மக்கள் ஆட்சி மலர வேண்டும் என்று பறைசாற்றி னேன். என்னைச் சுற்றிலும் வட்டமிட்டுக்கொண் டிருந்த மக்களிடமும், இளைஞர்களிடமும், தோழர்களே! நீங் கள் புரட்சிப் பெரு நெருப்பில் குதிக்கத் தயாராகவேண் டும். வீழ்ச்சியுள்ள இனத்தை எழுச்சி பெறச் செய்ய வேண்டும். எந்த விலை கொடுத்தேனும் விடுதலையைப் பெற்றுத் தீர வேண்டும். அந்தப் பணியில் நாம் ஈடு படும்போது, வெட்டும், குத்தும் நம்மைத் தேடி வரும்; வாழ்வுக்கும் சாவுக்கும் மத்தியில் ஊசலாட வேண்டிய

நிலைமை ஏற்படும்; ஆணவக்காரர்கள், அரசபீடத்தினர் ஒழிந்தால்தான், மக்கள் ஆட்சி மலரும்; என்பதை உணர வேண்டும். நம்மைக் கொல்லவும், நமது இரத்தத்தை ருசி பார்க்கவும் மஞ்சு அரசாங்கம் கோர நடனம் புரிகின்றது. அதை நாம் பொருட்படுத்தக் கூடாது. இளைஞர்களே! சிங்க நெஞ்சுடன் பணியாற்றுங்கள், ஏறு போல் பீடு நடை நடந்து முன்னேறுங்கள், வாழ்ந்தால் உரிமையோடு வாழ்வோம், இல்லையேல் மாள்வோம் என்ற உறுதியுடன் புரட்சிப் போரில் ஈடுபடுங்கள். நாம் எடுத்துக் கொண்ட பெரும் பணி சாதாரணமானதன்று. ஒரு பெரிய மாற்றத்தை நாம் ஏற்படுத்த முற்படுகிறோம். அதன் அருமை பெருமைகளைப் பாமர மக்கள் அறியமாட்டார்கள். யுக யுகமாக இருந்து வந்ததாகக் கூறப்படும் பழைய ஏற்பாடுகளை நாம் திருத்தி அமைக்க முற்படுகிறோம். மமதை என்னும் மலைக்கு வெடி மருந்து வைக்கின்றோம். அந்த மலை வெடிக்கும் போது நம்மீதும் சிறிய துண்டுகள் சிதறி விழும் என்பதை நாம் மறந்துவிடக்கூடாது. அதனைத் தாங்கிக் கொள்ளும் திறமும் நமக்கு இருக்க வேண்டும். ஆகவே புறப்படுங்கள் புரட்சிப் போர்க்களம் நோக்கி!" என்று கட்டளை யிட்டேன். என் மொழிகளை மதித்தனர் மாணவர்கள்: வாலிபர்கள் வரிசையாக அணிவகுத்து நின்றனர்; புரட்சிக் கொடி பறந்தது. இருந்தும் வெற்றி மாது எங்களைப் புறக்கணித்து விட்டாள். 1905-ஆம் ஆண்டு தான் கோமிண்டாங் கட்சி தோன்றியது. அதிலிருந்து

1911-ம் ஆண்டு வரையில் அதாவது ஆறு ஆண்டுகளில் பதின்மூன்று புரட்சிகள் நடைபெற்றன. ஆனால் ஒன்று கூட வெற்றி பெறவில்லை. அதனால் நானும், என் கட்சியினரும் தளர்ந்துவிடவில்லை. ஏன் எங்கள் புரட்சி தோல்வியடைந்துவிடுகிறது என்பது எங்களுக்குத் தெரியும். அன்றியும் பலதோல்விகள் ஒரு பெரும் வெற்றிக்கு அறிகுறி என்று நான் கூறினேன். அதை அனைவரும் ஏற்றுக்கொண்டனர். சீனாவில் நடைபெற்ற புரட்சிகளிலும் கலகங்களிலும் முக்கிய மானவைகளில் ஒன்று பாக்ஸர் கலகம். இந்த பாக்ஸர்கள் என்பவர்கள் அன்னிய நாட்டினரிடம் வெறுப்புக் கொண்டவர்கள்தான். ஆனால் மஞ்சு அரசாங்கம் நிலைக்க வேண்டும் என்று ஆதரவு காட்டி வந்தனர். இந்தக் கலகக்காரர்களை நான் பிற்போக்குச் சக்திகள் என்று கூறுவேன். 1900-ஆம் ஆண்டில் புரட்சி இயக்கங்களை எல்லாம் நசுக்கிவிட்டு, பிற்போக்குச் சக்திகளையும், அன்னிய துவேஷத்தையும் அணைத்துக்கொண்டிருந்தது மஞ்சு அரசாங்கம். அந்த நேரத்தில் ஐரோப்பிய நாடுகள் அதிவேகமாக வியாபாரத் துறையிலும், மதப் பிரச்சாரத்திலும், ஈடுபட்டிருந்தன. ஆனால் அப்போது சீனர்கள் வெள்ளப் பெருக்கத்தால் ஏற்பட்ட பஞ்சத்தைத் தாங்க முடியாமல் மிகவும் கஷ்டப்பட்டுக்கொண்டிருந்தனர்.

இவர்களுடைய கஷ்டங்களுக்ெல்லாம் மூலகாரணம் அன்னியர்கள் என்று கருதி அவர்களை அப்புறப் படுத்தவேண்டும் என்று கருதினர். அந்தக் காலத்தில்

அனேக இரகசிய சங்கங்கள் தோன்றின. அவைகளில் ஒன்று 'ஐஹோ சுவான்' என்பது. இந்தச் சங்கத்தைச் சார்ந்தவர்கள்தான் பாக்ஸர் கலகத்தின் அடிகோலிகள். வாள் விளையாட்டுகளும், முஷ்டி விளையாட்டுகளும் தான் தங்கள் சங்கத்தின் அடிப்படை அம்சம் என்று கூறிக்கொண்டு நாடோடிகளைப்போல் ஊர் சுற்றி வந்தனர். அப்படிச் செய்வதன் மூலம் எல்லா ஊர்களிலும் கிளைச் சங்கங்களை நிறுவவும், அன்னியரை விரட்டும் திட்டங்களைச் சொல்லிக் கொண்டும் வந்தார்கள். இவர்கள் இயக்கம் நாடு பூராவும் பரவியது. இவர்கள் மக்களிடம், "எங்கள் சக்தியால் அன்னியர்களை விரட்டி விடுவோம், அவர்கள் கப்பல்கள் இங்கே வரமுடியாத படி செய்து விடுவோம். ஆகவே எங்களை ஆதரியுங்கள்" என்று பிரச்சாரம் செய்தனர். இவர்கள் அன்னியர்களை எதிர்த்துத் தங்களை ஆதரிப்பதால் மஞ்சு அரசாங்கம் இவர்களை மறைமுகமாக ஆதரித்தது.

பீகிங் அரசாங்கம் தங்களை ஆதரிக்கிறது என்பதைத் தெரிந்து கொண்டதும், அவர்கள் அட்டகாசம் அதிகப்பட்டது. "அன்னியப் பேய்களை விரட்டி அடியுங்கள்; மஞ்சு அரசாங்கத்தை ஆதரியுங்கள்" என்று கூப்பாடு போட்டனர். இந்தக் கூக்குரலின் பலனாக அன்னியர்கள் தலைகள் உருண்டன. அவர்களுடைய பொருள்கள் சேதமடைந்தன; கிறித்துவர்களாய் மாறிய சீனர்களும் கொல்லப் பட்டார்கள்; அன்னியர்களால் புகுத்தப்பட்ட ரயில் கவிழ்ந்தது; தந்திக்கம்பி அறுபட்டது;

மின்சாரம் தீப்பற்றி எரிந்தது; தபால் நிலையங்கள் தவிடு பொடியாயின. இந்த நிகழ்ச்சிகளைக் கேட்ட அரசாங்கம் பாக்ஸர்கள் வெற்றி பெறுகிறார்கள் என்று கருதித் தன் ஆதரவைப் பகிரங்கமாகக் காட்டியது. இவ்வளவு நிகழ்ச்சிகளுக்குப் பின்னரும் எப்படி மௌனம் சாதிப்பார்கள் அன்னியர்கள்? தங்களைப் பாதுகாத்துக் கொள்ள ஏற்பாடு செய்துகொண்டனர். சிதறியிருந்த அன்னியரை ஒன்று சேர்த்தனர். அது வரையில் யாங்க்ட்ஸி நதியின் முகத்துவாரத்தில் தூங்கிக்கொண்டிருந்த போர்க் கப்பல்கள் நகர்ந்தன. ஓர் ஆங்கிலப் பத்திரிகை மஞ்சு அரசாங்கத்தைப் பலமாகத் தாக்கிக் கட்டுரை எழுதியது. இவைகளைக் கண்ணுற்ற மஞ்சு அரசாங்கத்தை ஆட்டிப் படைத்த சக்கரவர்த்தினி ஆத்திர மடைந்தாள். அதன் காரணமாக "அந்நிய நாட்டு ஸ்தானீர்கள் அனைவரும் இருபத்து நான்கு மணி நேரத்திற்குள் பீகிங் நகரத்தை விட்டு வெளியேற வேண்டும்" என்ற உத்தரவு பிறந்தது. ஆனால் ருசி கண்ட அன்னியர்கள் அந்த உத்தரவைப் புறக்கணித்து விட்டனர். அரசி மறு உத்தரவு ஒன்று பிறப்பித்தாள். அதில், "உங்கள் மீது மஞ்சு அரசாங்கம் போர் தொடுத்திருக்கிறது" என்றிருந்தது. மஞ்சு அரசாங்கத்தின் மந்திரிகளை நேரில் சென்று பார்க்க விரும்பிய ஜெர்மானிய ஸ்தானாதிபதியை நடுத்தெருவில் ஒரு சீனப் போர் வீரன் சுட்டுக் கொன்றான். அன்னியர்கள் வாசஸ்தலங்களை அரசாங்கப் படைகள் முற்றுகையிட்டன. எட்டு

வாரகாலமாக இந்த முற்றுகை நீடித்தது. அதற்குள் தங்கள் மக்களைப் பாதுகாப்பதற்காக பிரிட்டன், பிரான்ஸ், ருஷ்யா, ஜெர்மனி, ஜப்பான், அமெரிக்கா, இத்தாலி, ஆஸ்திரியா ஆகிய எட்டு நாடுகளும் போர்ப் படைகளை அனுப்பின. அந்தப் படைகள் பீகிங்கை அடைந்து மஞ்சுப் படைகளை விரட்டி அடித்துத் தங்கள் மக்களைக் காப்பாற்றிக் கொண்டன. இந்தச் செய்தியைக் கேள்வி யுற்ற அரசி தன் பரிவாரங்களுடன் எங்கேயோ மாறு வேடத்தில் ஓடிவிட்டாள். கேட்க வேண்டுமா நிலைமையை? அன்னியத் துருப்புகள் புகுந்துவிட்டன நகரத்திற்குள். அவர்கள் விருப்பப்படி சூறையாடினர். சொல்ல முடியாத அக்கிரமங்களைச் செய்தனர். பீகிங் நகரில் மட்டுமல்ல; எல்லா இடங்களிலும் இந்த அநியாயங்கள் நிகழ்ந்தன. இந்தக் கலகத்துக்குத்தான் பாக்ஸர் கலகம் என்று பெயர்.

அதன் பிறகு சீனாவை அந்நியர்கள் எப்படி நடத்தி யிருப்பார்கள் என்பது சொல்ல வேண்டியதில்லை. பின்னர் சீன அரசாங்கத்துப் பிரதிநிதிகளுடன் பேசி ஓர் ஒப்பந்தம் செய்துகொண்டார்கள். அதற்கு பாக்ஸர் ஒப்பந்தம் என்று பெயர்.

உலகில் பல கொடூரமான ஒப்பந்தங்கள் நடைபெற்றிருக்கின்றன. ஆனால் பாக்ஸர் ஒப்பந்தத்தைப் போல கடுமையான நிபந்தனைகள் அடங்கிய ஒப்பந்தங்கள் கிடையாது. இந்த ஒப்பந்தங்கள் நிறைவேறுவதற்கு முன்பே நடைமுறைக்குக் கொண்டு வரவேண்

டும் என்று துடிதுடித்தார். அன்னியர் 1900-ஆம் ஆண்டிற்குப்பின் யாங்க்ட்ஸீ முகத்துவாரத்திலிருந்து பீகிங் நகரம் வரையில் அன்னியர்களின் யுத்தக் கப்பல்களும், வியாபாரக் கப்பல்களும் நடமாடிக்கொண்டிருந்தன. அப்போது சீனுவில் சீனர்கள் நடமாடப் பயந்தனர். எங்கு பார்த்தாலும் அவர்கள் 1902 - ஆம் ஆண்டு பாக்ஸர் கலகத்திற்குத் தூபம் போட்டுவிட்டு யுத்தத்தை ஆரம்பித்துவிட்டு அன்னியர் முற்றுகை யிட்டதும் ஓடிப்போனுளே மஞ்சு வம்ச அரசி அவள் மறுபடியும் தன் முட்டாள் பரிவாரங்களுடன் நகரத்திற்குள் நுழைந்தாள். அன்று அதிகாரம் மஞ்சு அரசாங்கத்தினிடம் இல்லை. மஞ்சு அரசாங்கத்தின் கௌரவம் மறைந்துவிட்டது. சீனுவின் முழு உரிமையும் அன்னியர்களுக்கே. ஆனுல் அந்தப் பொம்மை அரசாங்கம், 'சீன ஏகாதிபத்தியம்' என்ற வெறும் பட்டத்தை மாத்திரம் சுமந்துகொண்டிருந்தது.

* * *

# கோமிண்டாங் கட்சி

சீன ஏகாதிபத்தியம் என்ற வெறும் பட்டத்தை மாத்திரம் சுமந்துகொண் டிருந்தது மஞ்சு அரசாங்கம். அந்தச் சமயத்தில் இளைஞர்களாகிய நாங்கள், மேனுட்டு நாகரிகத்தை உணர்ந்த நாங்கள், அரசியல் பொருளாதாரம் புரிந்த நாங்கள் எங்கள் தேசம் நாளுக்கு நாள் தேய்பிறையாகி வருவதைக் கண்டு வருந்தினேம். ஏன் இந்த நிலை ஏற்பட்டது என்று நாங்கள் எங்களையே கேட்டுக் கொண்டோம். நேற்றுப் பிறந்த சிறிய நாடாகிய ஜப்பான் உலகிலேயே மிகப் பெரிய நாடாகிய ருஷ்யாவைத் தோல்வியுறச் செய்தது எங்களுக்கு வியப்பைத் தந்தது.

எங்களுக்கு ஏற்கெனவே சுதந்திர தாகமூட்டிய தலைவர் சன்யாட்சன் அப்போது சீனுவில் இல்லை.எங்கள் கட்சியை வலிவு படுத்தவும், நிதி திரட்டவும் வெளிநாடுகளுக்குச் சென்றுவிட்டார். அவருடைய முழு பொறுப்பையும் கோமிண்டாங் கட்சியினராகிய எங்களிடம் ஒப்படைத்துவிட்டுச் சென்றூர். அவர் கட்டளைகளையும், ஆலோசனைகளையும் அடிக்கடி பெற்று அதன்படி நடந்து வந்தோம். பாக்ஸர் கலகத்தின் பின் மஞ்சு

அரசாங்கம் ஆணிவேர் அற்ற மரம்போ லிருந்தது. ஆனால் நாங்கள் இந்த ஆட்சியை மதிக்கவில்லை. கிளர்ச்சி செய்துகொண் டிருந்தோம். எங்கள் கிளர்ச்சிக்கு நகர முழுவதும் ஆதரவு இருந்தது. இதை அறிந்த அரசாங்கம் எங்களைத் திருப்தி செய்யும் பொருட்டு, சில சீர்திருத்தங்களைப் பிரகடனப் படுத்தியது. மேனாட்டு முறைகளையும், கல்வி நிலையங்களையும் அரசாங்கம் நிறுவியது. சீனர்களுக்குச் சில உரிமைகளும் வழங்கப் பட்டன. இவ்விதம் செய்வதன் மூலம் புரட்சி ஏற்படாமல் தடுத்து விடலாம் என்று கருதினார்கள்.

அப்போதிருந்த அரசியும் அரசனும். ஆனால் அந்தக் கருத்து நிறைவேற வில்லை. *1908*-ஆம் ஆண்டு அரசனும், அரசியும் இறந்து விட்டார்கள். இவர்களுக்குப் பின்னால் தொடை நடுங்கிகளும், திறமை யற்றவர்களும் அரசபீட மேறினர். நாட்டைத் திறமையுடன் நடத்தக் கூடிய தலைவன் அரசாங்கத்தில் இல்லை. அப்போதிருந்த ஒரே ஒரு திறமைசாலி யுவான் ஷி காயும் அரச பீடத்தை விட்டு ஒதுங்கியே யிருந்தான். ஆகவே நிர்வாகத்தில் குழப்பங்கள் மலிந்து கிடந்தன.

அந்தச் சமயத்தில் மஞ்சு அரசாங்கத்தைப் பற்றி மக்கள் அலட்சியப் படுத்தியே பகிரங்கமாகப் பேசிக் கொண்டனர். அரசாங்க நிர்வாகத்தில் சீனர்களுக்கு சம உரிமை அளிக்கப்படாததால் அரசாங்கத்திற்கு சீன அதிகாரிகளே விரோதமா யிருந்தனர். மஞ்சு அதிகாரிகள் தங்களைத் தட்டிக் கேட்க ஆளில்லாத காரணத்தால்

மக்களைக் கண்டபடி நடத்தினார்கள். ஒழுங்கற்ற செயல் களைப் புரிந்தார்கள் மஞ்சு அரசாங்கம் சற்று வன்மை யோடு இருந்தபோதே பல இரகசிய சங்கங்கள் மலிந் திருந்தன. இப்போது கேட்க வேண்டுமா? அவைகள் அதிகமாயின. படித்த இளைஞர்கள் பலநாட்டு வரலாறு களைத் தெரிந்துகொண் டிருந்ததால் தங்கள் நாடு அன் னியர்களால் சுரண்டப்படக்கூடாது" என்ற கோஷம் எழுப்பினர். இந்தக் குரல் வெளிநாட்டுச் சீனர்களின் வாயிலிருந்தும் வெளிவந்தமையால்தான் எங்கள் தலை வர் சன்யாட்சன் அவர்களைக் கண்டு பேசி எங்கள் கட்சிக்கு ஆதரவு தேட ஓடிச் சென்றார். தலைவர் சன்யாட்சன் இந்தக் கட்சியை நிறுவியபோது அதன் முக்கியஸ்தர் பதினைந்துபேர். ஆனால் இன்று ஆயிர மாயிரம் இளைஞர்கள் அந்தக் கட்சியை ஆதரிக்கின் றனர்.

எங்கள் கடைசிப் புரட்சிக்குக் காரணங்கள் பல. 1910-11-ஆம் ஆண்டில் மத்திய சீனாவில் ஏற்பட்ட பஞ் சத்தால் மக்கள் வீடு வாசலின்றித் தவித்தனர். இந்தக் கோரப் பஞ்சம் காரணமாக லட்சக்கணக்கானவர்கள் உயிர் நீத்தனர். ஆயிரக் கணக்கானவர்கள் வேலையின்றி வாடினர். இவர்கள் எங்கள் ஆட்சியை மனமார ஆதரித்தார்கள். தாய்நாட்டின் நன்மைக்காக - மக்களின் விடுதலைக்காக - எதையும் செய்யத் தயாராய் இருந் தனர். பஞ்சம் பலரைப் பலிகொண்டும் சீனாவின் ஜனத் தொகை குறையாமல் அதிகரித்தது. உற்பத்தி குறைந்

தது. ஆகவே விலை விஷம்போல் ஏறியது. இந்தத் தொந்தரவுகளைத் தாங்காத மக்கள் எங்களுடன் சேர்ந்து கொண்டனர்.

அரசாங்கத்தின் நிர்வாகத்திற்காக வேண்டிய பொருள்கள் இல்லாமையால், துன்பப்படும் மக்களை மேலும் வலியுறுத்தி வரி வசூலித்தனர். புதிய வரிகளைச் சுமத்தினர். இஃதும் ஒரு காரணம் அரசாங்கத்தை மக்கள் வெறுத்து ஒதுக்கியதற்கு. அத்துடன் சுதந்திர உணர்ச்சியும், விடுதலை வேட்கையும் கொண்ட மக்களிடம் இளைஞர்களாகிய நாங்கள் மேடைகளில் ஏறி எங்கள் பேச்சுரிமைகள் மூலம் அரசாங்கத்தின் கொடுமையும், அஃது ஒழிய வேண்டியதன் அவசியத்தையும், குடியரசு மலரத் தலைவர் சன்யாட்சன் கூறிய காரண காரியங்களையும் எடுத்து விளக்கினோம். எங்கள் செல்வாக்கு நாளுக்கு நாள் வளர்பிறை யாயிற்று. இந்த நிகழ்ச்சிகளைக் கவனித்து வந்த அரசாங்கம், புரட்சி நடைபெறுமல் தடுக்க மாகாணச் சட்டசபைகளை நிறுவி மக்களைத் தேர்ந்தெடுத்தது. புதிய திட்டங்களை அமுல் நடத்துவதாகக் கூறியது. அதில் ஒன்று ரயில் பாதையின் மூலம் எல்லா மாகாணங்களையும் இணைப்பது. இவ்விதம் செய்வதால் போக்குவரத்து வசதியாய் இருப்பதுடன் வியாபாரம் பெருகும்; பொருளாதார நிலை உயரும் என்று கருதியது. ரயில் பாதையை மஞ்சு அரசாங்கமே போட்டு அதைத் தங்கள் நிர்வாகத்திலேயே வைத்துக் கொள்ளுவது என்று தீர்மானித்தது. அந்தத்

தீர்மானத்தின்படி எங்கெந்த மாகாணங்களில் ரயில் பாதை போடப்படுகின்றனவோ அந்தந்த மாகாணவாசிகளிட மிருந்தே பணம் வசூலித்துப் போடத் தீர்மானித்தது. அதன்படியே வேலைகள் துவங்கி நடைபெற்று வந்தன. அந்தச் சமயத்தில் அந்நியர்கள் முன் வந்து தாங்களே ரயில் பாதைகளைப் போட்டுத் தருவதாகவும், அதற்கு வேண்டிய பணமும் தாங்களே தருவதாகவும் மஞ்சு அரசாங்கத்தை நெருக்கினார்கள். பீகிங் அரசாங்கம் அதை ஒத்துக்கொண்டது. இதை அறிந்த மாகாண வாசிகள் தங்கள் உரிமைகளை அந்நியருக்குக் கொடுத்ததைக் குறித்து ஆத்திர மடைந்தனர். ஆத்திரம் கிளர்ச்சியாக உருவெடுத்தது. இந்தக் கிளர்ச்சி ஷேக்துவான் மாகாணத்தில் ஒத்துழையாமை இயக்கமாகக் காட்சியளித்தது. கடைகள் அடைக்கப் பட்டன; வேலை நிறுத்தங்கள் நடைபெற்றன; மாணவர்கள் பள்ளிக்குப் போக மறுத்துவிட்டனர்; விவசாயிகள், "நாங்கள் வரி செலுத்த மாட்டோம்" என்றனர். பீகிங் அரசாங்கம் சும்மா இருக்கவில்லை. படைகளை அனுப்பி அவர்களை அடக்கிவிட்டது பலாத்காரத்தால்! அரசாங்கம் வெற்றி பெற்றதாகக் கருதியது. ஆனால், கிளர்ச்சி அந்த மாகாணத்தோடு நின்றுவிடாமல் காட்டுத் தீயைப்போல் பல மாகாணங்களுக்கும் பரவியது. இதன் காரணமாக மஞ்சு அரசாங்கத்தின் மீது இராணுவத்திற்கே அதிருப்தி ஏற்பட்டு விட்டது.

படை வீரர்களாயிருந்த சீனர்கள் அரசாங்கத்தை ஆதரிக்கவே யில்லை; மஞ்சு இனத்தைச் சேர்ந்த வீரர்

களை மாத்திரம் நம்பியிருக்க வேண்டியதாயிற்று. மஞ்சு அரசாங்கத்தின் பலவீனங்கள் முழுவதும் எங்களுக்குப் பெரிய தைரியத்தையும், பலத்தையும் தந்தன. நாங்கள் மிகவும் முன்னேறிவிட்டோம்; எங்கள் கட்சியை மக்கள் தாராளமாக ஏற்றுக் கொண்டனர். ஆறு மாதங்களுக்கு முன்னர், அதாவது 1911-ஆம் ஆண்டு மார்ச் மாதம் இருபத்தொன்பதாம் நாள்கூட ஒரு புரட்சி காண்டன் நகரில் நடைபெற்றது, அதிலும் நாங்கள் தோல்வி அடைந்தோம். அந்தப் புரட்சியில் எழுபத்திரண்டு வாலிப வீரர்கள் தாய்நாட்டிற்காக உயிர் நீத்தனர். அவர்களை மரியாதையோடு அடக்கம் செய்துவிட்டு அவர்கள் புதையுண்ட இடத்தைப் புனிதமான இடமாகவே நாங்கள் பாவித்து வருகிறோம். அதுவே எங்களின் கடைசித் தோல்விப் புரட்சி. நாங்கள் புரட்சி செய்வதற்கும், மஞ்சு அரசாங்கத்தின் கண்களில் படாமல் மறைந்து வாழ்வதற்கும், அந்நிய நாட்டினர் உரிமையோடு வாழ்ந்து வந்த கன்ஸேஷன் பிரதேசங்கள் தான் இடமளித்தன. நாங்கள் எங்கள் திட்டங்களையும் புரட்சிக்கு வேண்டிய முன்னேற்பாடுகளையும் அங்குதான் செய்து வருவோம். உலகின் பல பாகங்களில் புரட்சி ஏற்பட்டதன் காரணத்திற்கும் பெரும் மாறுபாடிற்கும் சீனப் புரட்சி எப்படித் தோன்றியது என்றால்:—

சீனாவின் மத்திய பாகத்தில் யாங்க்ட்ஸீ நதி பாய்கிறது. அந்த நதியின் கரையோரமாக ஹாங்கோ என்ற

ஒரு நகரம் உண்டு. அங்கு அங்கியர்கள் உரிமையோடு வசித்து வந்தனர். அங்கு ஒரு சிறிய வீட்டில் பட்டப் பகல் நேரத்தில் அந்த வீட்டிலிருந்து வெடி சத்தம் கேட்டது. அந்தச் சத்தம் மக்கள் கவனத்தை ஈர்த்தது; மக்களும் கூடிவிட்டனர்; பரபரப்புடன் உள்ளே என்ன நடைபெறுகிறது என்ற கேள்விகளைக் கேட்ட னர். இந்தச் செய்தி உடனே போலீஸுக்கு எட்டியது; போலீஸ் தன் படையுடன் அந்த வீட்டை முற்றுகை யிட்டது. சில போலீஸ் அதிகாரிகள் உள்ளே சென்று பரிசோதித்தனர்.

அவர்கள் கைகளில் சில புத்தகங்களும், பெயர் கள் எழுதி யிருக்கும் காகிதங்களும் அகப்பட்டன. அந்த இடம் வெடி குண்டு தயார் செய்யும் இடம் என்பதையும் கண்டுபிடித்து விட்டனர். புரட்சிவாதி களின் விலாசங்கள் அவர்கள் கைகளில் அகப்பட்டன. உடனே அந்தந்த விலாசத்திற்குச் சென்று அனைவரை யும் கைது செய்தனர். சில மணி நேரத்திற்குள் கைது செய்யப்பட்ட அனைவரின் தலைகளும் தரையில் உருண் டன. இந்தச் செய்தி மிகுந்த பரபரப்புடன் எங்கும் பரவின. யாங்கட்ஸீ நதியின் தென்கரையி லிருந்த வூசங் நகரம் சீனர்களின் வாழ்விடம். அங்கு நகரப் பாதுகாப்புக்காக மூவாயிரம் பேர்க ளடங்கிய சீனப் படை ஒன்றிருந்தது. இவர்கள் அரசாங்கத்தின் இரா ணு வத்தினர் என்றாலும், சீனர்கள் தங்கள் பொன்னாட்டின் விடுதலைக்காகப் பாடுபட்ட புரட்சிவாதிகளை ஆட்டை

அறுப்பதுபோல, மாட்டை அறுப்பதுபோலத் தங்களே அறுத்த நிகழ்ச்சி ஆத்திரத்தை மூட்டின. ஏற்கெனவே இவர்களிடம் குடிகொண்டிருந்த சுதந்திர உணர்ச்சி யுடன்; புரட்சி எண்ணங்களுடன்; தலைகள் உருண்ட சம்பவமும் சேர்ந்து இனியும் நாம் மௌனம் சாதிப்பது மடத்தனம் என்ற முடிவுக்கு வந்துவிட்டனர். கோமிண் டாங் கட்சியினரும், இளைஞர்களும். வாலிபர்களும் அநியாயமாகத் தலை வாங்கப்பட்டபின், அவர்கள் தங் கள் ஆயுதங்களுடன் கலகம் செய்யக் கிளம்பிவிட்டனர். அவ்வளவுதான்! அன்று மாலை நகரத்தின் பல பாகங் களிலும் துப்பாக்கிச் சப்தங்கள் - எங்கு பார்த்தாலும் நெருப்பு! ஆயுதபாணிகளின் நடமாட்டம். அரசாங்கத் துருப்புகளே தங்கள் துப்பாக்கி முனைகளை அரசாங்கத் தின் முன்னர் நீட்டிவிட்டன வென்றால் கேட்க வேண் டுமா மக்களின் ஆனந்தத்திற்கு! கோமிண்டாங் கட்சி யைச் சேர்ந்த நாங்கள் மட்டும் சும்மா இருப்போமா? அரசாங்க அலுவலகங்கள் அழிக்கப் பட்டன; அதிகாரி களின் இடங்கள் அழிக்கப் பட்டன; மாகாண அதிகாரி யும், ராணுவத் தளபதியும் இருந்த இடம் தெரியாமல் ஓடிவிட்டனர். கலகப் படையினருக்குத் தகுதிவாய்ந்த தலைவன் இல்லை. இந்தப் புரட்சியை நடத்த எங்கள் தலைவர் சன்யாட்சனும் இல்லை. என்ன செய்வது என்று யோசித்தோம். லீ யுவான் ஹூங் என்னும் பெயருடைய யுத்தப் படைத் தலைவன் இருப்பிடம் நோக்கி நடந் தோம். நடு இரவு. அவன் நிம்மதியாகத் தூங்கிக்

கொண் டிருந்தான். அவன் முன் துப்பாக்கி முனையைக் காட்டி எழுப்பினோம்; பயந்து எழுந்தான் விஷயத்தை விளக்கி எங்கள் படைக்குத் தலைமை தாங்கித் திறமை யுடன் நடத்தித் தரும்படி கேட்டோம். பாவம்! அந்த நல்ல மனிதன் உண்மையான எண்ணத்துடன் அந்தப் பதவியை ஏற்றுக் கொண்டான். அந்தப் படைகளை எப்படி நடத்த வேண்டும் என்ற நுணுக்கங்களை யெல் லாம் நன்கு அறிந்த அவன் சில மணி நேரத்தில் கலகப் படையை ஒழுங்கு படுத்திக் கொண்டான். உடனே "ஹாங்கோ, வூசங், ஹான்யாங் என்ற இடங்களைக் கைப் பற்றிக் கொண்டான். எதிர்த்தவர்களைச் சுலபமாகச் சமாளித்த வண்ணம் வெற்றிப் பாதையை நோக்கிச் சென்றுகொண் டிருந்தான் அத்துடன் இந்தப் புரட்சி நாட்டின் நன்மைக்காகவே நடைபெறுகிறது என்பதை யும் மக்கள் மனதில் பதியும்படி செய்தான்.

வூசங்கில் புரட்சிப் போராட்டங்கள் துவங்கிவிட் டன என்ற செய்திகள் மற்ற மாகாணங்களுக்கும் தெரிந்துவிட்டன. அவைகளும் அந்த வழியைப் பின் பற்றின. எங்கும் புரட்சி! எங்கும் கலகம்! இந்தப் புரட்சி துவங்கிய ஐம்பது நாட்களில் பதினன்கு மாகாணங்கள் புரட்சிக் கொடிகளைப் பறக்கவிட்டன. பாவம்! மஞ்சு அரசாங்கம் இவ்வளவு சீக்கிரம் மறைந்து விடும் என்று எவரும் எதிர்பார்க்கவில்லை. புரட்சிக்காரர் கள் வருகின்றனர் என்ற சொல்லைக் கேட்டவுடன் பொறுப்புள்ள அதிகாரிகள் தங்கள் அதிகாரத்தை

விட்டு விட்டு உயிரைக் காப்பாற்றிக்கொள்ள ஓடிவிட் டனர். ஆங்காங்குப் புரட்சி அரசாங்கங்கள் நிறுவப் பட்டன. அங்கிருந்த அரசாங்கப் படைகள் புரட்சிப் படைகளாயின. புரட்சிக்காரர்களாகிய நாங்கள், அர சாங்கப் படைகளையும், மக்களின் ஆதரவையும் பெற்று எங்கும் அமைதியை நிலவச் செய்தோம். மஞ்சு அரசாங் கத்தின் தலைநகரமாகிய பீகிங் நகரிலும் இந்தப் புரட்சிப் புயல் வீச ஆரம்பித்துவிட்டது. மஞ்சு அரசாங்கம் பயந்துவிட்டது; திகில்கொண்டு திணறியது; இருந்தும் விட்டுக் கொடுக்க மனமில்லாமல் புரட்சியை எப்படி யும் ஒடுக்க வேண்டும் என்றே முடிவு செய்தது. இந்தப் பெரிய எதிர்பாராத புரட்சியின் முதல் நாள் 1911-ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் பத்தொன்பதாம் நாள்! அன்றுதான் எங்கள் விடுதலையின் முதல்நாள்! வெற் றித் திருநாள்!

புரட்சிகள் நாடெங்கும் வெற்றி பெற்றன. வெற்றி பெற்ற இடங்களில் புரட்சி அரசாங்கங்கள் தோன்றின. இருந்தாலும் ஒன்றோடொன்று இணைந்து வாழாமல் தொடர்பின்றியே நடந்து வந்தன. ஒவ் வோர் இடங்களில் இருந்தவர்களும், ‘நாங்களே புரட் சியின் மூலகாரணர்கள், எங்களிடமே அதிகாரம் இருக்க வேண்டும்’ என்று கூறினர். எல்லா மாகாணங் களும் இவ்விதம் உரிமைக் குரல் எழுப்பின. இவை களில் முந்திக்கொண்டு வந்தது ஷாங்காயி லிருந்தவர் கள். இவர்கள் அரசாங்கம் நிறுவி அந்நிய வல்லரசுகள்

தங்களை ஆதரிக்குமாறும் அறிக்கை விடுத்தனர். உண்மையிலேயே புரட்சிக்காகப் பாடுபட்டுப் போராடித் திறமையுடன் நடத்திச் சென்றவன் புரட்சியின் தலைவன் லீ யுவான் ஹுங் தான். இவன் ஹூசங் புரட்சி அரசாங்கம் நிறுவியவன். இருந்தும் பெருந்தன்மையும், உண்மையான நாட்டுப் பற்றும், குடியரசு மலர வேண்டும் என்ற நல்லெண்ணமும் உடைய அவன் தன் உரிமைகளை, அதிகாரத்தை ஷாங்கய் புரட்சிக்காரர்களுக்கு விட்டுக் கொடுத்துவிட்டான். இவனுடைய பெருந்தன்மை உள்நாட்டுக் குழப்பம் புரட்சிக்காரர்களிடம் ஏற்படாமல் தடுத்து, குடியரசு வாழ்வைப் பெற வழி செய்தது.

தலை தெறிக்கும் விதத்தில் புரட்சி அரசாங்கம் முன்னேற்றப் பாதையை நாடி ஓடுவதைக் கண்ட மஞ்சு அரசாங்கம், புரட்சியை அடக்கிவிடவே ஆசைப்பட்டது. அஃது முடிகிற காரியமா? என்பதைச் சிந்திக்கவே இல்லை. படை திரட்டிப் போர் தொடுக்க விரும்பியது. திறமையானவர்கள் இல்லை; என்ன செய்வது என்று யோசித்தது.பின்னர்த் தங்களுடன் மனமாற்றம் ஏற்படுத்திக்கொண்டு அரசியலிலிருந்து ஒதுங்கியிருந்த யுவான் ஷி காய் என்பவனை வற்புறுத்தி அழைத்தது. அப்போது அவன் ஒருவன்தான் திறமை யுடையவன், இராஜ தந்திரி என்று சீனர்களால் கருதப்பட்டான். யுவான் அந்த அழைப்பை எதிர்பார்க்கவில்லை; இருந்தாலும் அதை ஏற்றுக்கொண்டு ஒரு பெரும் படை

யுடன் பீகிங்கிலிருந்து புறப்பட்டான். சில புரட்சிப் படைகளை விரட்டி அடித்தான்; ஹாங்கோ நகரை எரித்துச் சாம்ப லாக்கினன்; இவனுக்கு வெற்றிகள் கிடைத்தும் அதை அவன் பெருதவன் போலவே பாசாங்கு செய்தான். ஏனென்ருல் அவன் மனதில் பேராசைப் பேய் குடிகொண்டுவிட்டது. நாம் ஏன் சர்வ சீனுவுக்கும் சக்கரவர்த்தியாகக் கூடாது? என்ற கேள்வி யும் அவன் மனதில் எழுந்தது. அதனுல், தன் வன்மையைப் புரட்சிவாதிகளுக்கும், மஞ்சு ஆட்சிக்கும் காட்டித் தானே சர்வாதிகாரியாக வேண்டும் என்று திட்டமிட்டுக் கொண்டான்.

இஃது இப்படி யிருக்க, லீ யுவான் ஹுங் புரட்சி அரசாங்கங்களை ஏற்படுத்திய மாகாணங்களின் பிரதி நிதிகளை ஒன்று கூட்டி; நான்கிங் நகரில் ஒரு தேசீய சபை அமைத்துக் கொண்டான். அதன் பிறகு இந்தச் சபை எங்கள் தலைவர் சன்யாட்சன் போதித்து வந்த குடியரசு முறைகளைத் தழுவிய ஒரு தற்காலிக அரசாங் கத்தை நிறுவினன். அத்துடன் எங்கள் தலைவர் சன்யாட்சனையே அந்தக் குடியரசின் தற்காலிகத் தலைவ ராகத் தேர்ந்தெடுத்தார்கள்.

* * *

# சன் யாட் சன்

குடியரசின் தற்காலிகத் தலைவனுகத் தெரிந்தெடுத்தார்கள் என்னை என்று கேள்விப் பட்டேன். என் தாய் நாட்டில் புரட்சி முளைத்து மரமாகிக்கொண்டிருந்த செய்தியைக் கேள்வியுற்று இன்னும் என்னுல் அமெரிக்காவில் சுற்றுப் பிரயாணம் செய்துகொண்டிருக்க முடியவில்லை. ஓடோடியும் வந்தேன். என் இன்பக் கனவு பலித்தது கண்டு மகிழ்ந்தேன். குடியரசு நிறுவ எத்தனை ஆண்டுகள் கஷ்டப்படவேண்டி யிருந்தது; எவ்வளவு துன்பங்களை ஏற்றுக்கொள்ள வேண்டியிருந்தது; எத்தனை புரட்சிகள் தோல்வி யடைய வேண்டி யிருந்தன. எனது சொல்லை நம்பி என்னோடு சேர்ந்து எத்தனை இளைஞர்கள் இன்னல்கள் அடைந்தனர். இந்தக் குடியரசு உடம்பு நோகாமல் கிடைத்ததல்ல! இந்த அருமையான மக்களாட்சி மலர மாணவர்கள் பலர் பலியானுர்கள்; இளைஞர்கள் பலர் இரத்தம் சிந்தினர்; பொது மக்களின் உடம்புகளைப் பலமுறை துப்பாக்கிக் குண்டுகள் துளைத்தன; ஆயிரமாயிரம் வாலிபர்கள் சிறைக்குள் நுழைந்தனர்; சித்திரவதைக் குட்பட்டனர்; பல பல தலைகள் உருண்டன. இந்தக் குடியரசு என்னும் செடி, மக்கள் சிந்திய கண்ணீராலும், செந்நீராலும் வளர்க்கப்பட்டது. முளை கிளம்பிய அந்தச் சிறு செடியைப் பாதுகாக்க வேண்டியதுதான் மிகவும் முக்கியமானது. அந்தப் பொறுப்பை என்னி

டம் ஒப்படைத்தனர், சீனப் புரட்சிக்காரர்கள். அவர்கள் எனக்குக் காட்டிய மரியாதையையும், பணிவையும் நான் என்றென்றும் மறக்கமாட்டேன். அவர்களின் ஆதரவு கொண்டு முடியாட்சியை ஒழித்துக் குடியாட்சியை ஏற்படுத்தவே விரும்பினேன். இப்போது நான் கோமிண்டாங் கட்சியின் தலைவன் மட்டுமல்ல; குடியரசின் தலைவனும் கூட!

பீகிங் நகரின் முடியாட்சி இன்னும் ஒழியவில்லை. இருந்தும் அந்த முடியரசுக்கு எதிராக நான்கிங்கில் ஒரு குடியரசும் என் தலைமையில் நிறுவப்பட்டது. அன்று 1912-ஆம் ஆண்டு ஜனவரி மாதம் முதல் நாள்!

குடியரசுக் கொடியைக் கட்டிக் காக்க வேண்டிய பெரும் பொறுப்பு என்னிடம் ஒப்படைக்கப்பட்ட போது, நான் சற்றுப் பயத்துடன்தான் ஏற்றுக்கொண்டேன். அனுபவமில்லாத வேலை யல்லவா? உடனே ஒரு தற்காலிக மந்திரி சபை ஒன்றை அமைத்தேன். அரசியல் திட்டம் வகுக்க வேண்டுமல்லவா? முடியரசாய் இருந்தால் பழைய அரசர்கள் ஆண்ட முறையைக் கையாளலாம். இது குடியரசல்லவா? மக்கள் ஆளும் ஆட்சி யல்லவா? ஆகவே குடியாட்சிக்கு வேண்டிய புதிய அரசியல் திட்டத்தை வகுக்க மக்கள் மன்றத்தைக் கூட்டத் தீர்மானித்தேன். என்றாலும் என் மனதில் நிம்மதியில்லை. எனக்கு எல்லாப் பிரச்னைகளைவிடச் சீனாவின் குடியரசுக்கு எதிர்ப்பில்லாமல் இருக்க வேண்டும்; குடியரசு நிலைக்க வேண்டும் என்பதில் முழு கவனமும்

சென்றது. ஆகவே எனக்கு ஒரு யோசனை உதய மாயிற்று. அப்போது மஞ்சு அரசாங்கத்தால் அனுப்பப் பட் டிருக்கும் யுவான் புரட்சிக்காரர்களை அடக்கிக் கொண் டிருந்தா னல்லவா? அவனைப் பற்றி நினைத் தேன். அப்போது சீனுவில் உள்ள சிறந்த இராஜதந்திர நிபுணன் அவன் ஒருவன்தான். அத்துடன் இராணுவ அனுபவமும் பெற்றவன். சீன மக்கள் அனைவருக்கும் அறிமுகமானவன். அவன் இன்று மஞ்சு அரசாங்கத் தின் பக்கம் இருக்கின்ருன். ஆகவே அவனைச் சீனக் குடி யரசின் பக்கம் திருப்ப எண்ணினேன். உண்மையிலேயே என்னை எல்லாரும் அறிந்திருக்க மாட்டார்கள். புரட்சிக் காரர்களும், ஏன்? இயக்கத்தவர்களும் தவிர மற்றவர் களுக்கு என்னைத் தெரியாது. அத்துடன் எனக்குப் பண பலம் இல்லை; அப்படி என்ஞல் படைப் பலம் இருக்க முடியுமா? இவை யாவும் யுவானிடம் இருந்தன. ஆகவே நான் என் தலைமைப் பதவியை யுவானுக்கே கொடுத்துவிட நினைத்தேன். தகுதியும் திறமையுள்ள வர்கள் தானே நாட்டை ஆள வேண்டும். ஆகவே எனது தலைமையை அவனுக்குக் கொடுத்துவிடத் தீர்மா னித்தேன். நான் என் தலைமையை அவனிடம் ஒப்பு வித்தால் குடியரசுக்கு இருக்கும் எதிர்ப்பு ஒழிந்துவிடும். யுவான் துணைகொண்டே முடியரசுக்கும் ஒரு முடிவு கட்டி விடலாம் என்று தீர்மானித்தேன். அதன்படியே “எங்கள் குடியரசுக் கொள்கையை நீ ஏற்றுக்கொள்வ தானுல் நான் எனது தலைமைப் பதவியை விட்டு விலகி உனக்கு அது கிடைக்கும்படி ஏற்பாடு செய்கின்றேன்”

என்று அறிவித்தேன். அவனும் நான் நினைத்தது போலவே குடியரசுக் கொள்கையைக் காப்பாற்ற ஒத்துக் கொண்டான். அத்துடன் நின்றுவிடவில்லை யுவான். உடனே ஓர் அறிக்கையைப் பிரகடனப் படுத்தினான். அதில்:—

"சீன மக்கள் குடியரசையே விரும்புகின்றனர். மக்களின் விருப்பத்தைப் பூர்த்தி செய்வதே மன்னன் கடமை. ஆகவே விரைவில் மன்னர் முடி துறக்க வேண்டும்" என்று குறிப்பிட் டிருந்தது. இது பகிரங்க அறிக்கை. இதைப் பார்த்து நான் மிகவும் மகிழ்ந்தேன். எனது குறி தவறவில்லை என்பதை எண்ணி எண்ணி மகிழ்ந்தேன். அந்த அறிக்கையின்படி சீனாவின் கடைசி அரசனான பூயீ மன்னன் 1912-ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் பன்னிரண்டாம் நாள் முடி துறந்தான். ஒழிந்தது முடியாட்சி; நிலைத்தது குடியாட்சி என்று குதூகல மடைந்தோம். எனது கனவு முழுவதும் நிறைவேறி விட்டதாகவே நினைத்து நினைத்து சந்தோஷித்தேன். முடி துறந்த மன்னனுக்கு ஒரு அன்னிய நாட்டு மன்னனுக்கு அளிக்கும் மரியாதையும், ஆண்டுக்கு நாற்பது லட்சம் டாலர் உபகாரச் சம்பளமாகவும் தருவதுடன், தற்போதுள்ள அரச பரிவாரங்கள் அரச விருதுகள் முதலியவைகளும் அவனுக்கே உரிய தென்றும் முடிவு செய்தோம். ஆம்! மஞ்சு அரச பரம்பரை அடியோடு மறைந்துவிட்டது.

பூயி மன்னன் முடி துறக்கும்போது, "யுவான் ஷிகாய் சர்வ அதிகாரங்களுடன் ஒரு தற்காலிகக் குடி

யரசை நிறுவி புரட்சிப் படைகளுடனும், புரட்சிவாதி களுடனும் யோசித்துப் பேசி நாட்டில் நன்மையை உண்டாக்குவதாக" என்ற பத்திரத்தைப் பிரகடனப் படுத்தி விட்டுப் போனான். அப்போது அதை நான் மிக வும் வன்மையாகக் கண்டித்தேன். குடியரசு நிறுவ, முடியரசின் பிரகடனம் தேவை யில்லை என்று தடுத் தேன். அப்படி அதன் அடிப்படையில் உருவாகும் குடி யரசில் பல தொந்தரவுகள் உண்டாகும் என்றும் கூறி னேன். அப்போது யுவான் 'நான் அந்தப் பிரகட னத்தை மதிக்கப் போவதில்லை' என்று கூறி என்னைச் சமாதானப்படுத்தி விட்டான்.

முன்னர்த் தீர்மானித்தபடி நான்கிங்கில் மக்கள் மன் றம்கூடி, மக்களுக்காக மக்களால் ஆளப்படும் ஆட்சியை நடத்த எல்லா மக்களுக்கும் சம உரிமை யுடையவர்கள் என்பதை அடிப்படையாகக் கொண்ட தற்காலிக அர சியல் திட்டம் நிறைவேறியது. அதன் பின்னர் எனது தலைமைப் பதவியை விட்டு விலகினேன். என் வேண்டு கோள்படி மக்கள் மன்றம் யுவான்ஷிகாயைச் சீனக் குடி யரசின் முதல் தலைவனாகத் தெரிந்தெடுத்தது. 1912-ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் பத்தாம் நாள் யுவான் பிகிங்கி லேயே தனது தலைமைப் பதவியை மிக்க ஆடம்பரத் துடன் ஏற்றுக் கொண்டான். அடுத்த நாளிலிருந்து குடியரசு சீனாவில் தற்காலிக அரசியல் திட்டம் நடை முறைக்கு வந்தது.

* * *

# யுவான்-ஷி-காய்

1912-ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் பத்தாம் நாள் பிகிங்கிலேயே தலைமைப் பதவியை மிக்க ஆடம்பரத்துடன் ஏற்றுக் கொண்டேன். அடுத்த நாளிலிருந்து குடியரசு சீனவில் தற்காலிக அரசியல் திட்டம் நடைமுறைக்கு வந்தது. நான் எதிர்பார்க்காத அதிர்ஷ்ட தேவதை என்னை நாடி வந்து என் கழுத்தில் மாலையிட்டாள். நான் எப்படி மறுக்க முடியும்? மஞ்சு அரசாங்கத்தால் புரட்சிக்காரர்களை அடக்கப் புறப்பட்டபோதே என் மனம் செய்துகொண்ட முடிவை யார் அறிவர். பாவம்! சன்யாட்சன் ஒரு வெள்ளை யுள்ளம் படைத்தவன். என்னை இன்று கூட உண்மையானவன் என்று கருதிக் கொண்டுதான் இருக்கிறன். இல்லை யென்றல் அவனிடம் வலிந்து சென்ற குடியரசுத் தலைமைப் பதவியை, எனக்குத் தத்தம் செய்திருப்பான? சர்வ சீனவுக்கும் நான்தான் சர்வாதிகாரி என் கனவு நனவாகி விடட்டும். கட்டாயம் நானே சக்கரவர்த்தியாக முடி சூடிக் கொள்வேன். குடியாட்சியாம்! அதிகாரம் மக்களுக்காம்! என்ன இது முட்டாள் தனம்! நமது அதிகாரத்துக்கு மக்கள் அடங்கி நடக்க வேண்டும். இந்த அரிய பெரிய வாழ்வை நான் அடைந்துதான் தீருவேன். ஒரு சன்யாட்சன் அல்ல! ஆயிரம் சன்யாட்சன் ஒன்றுகக் கூடி வந்து எனக்கு உபதேசம் செய்தாலும் எனக்கு குடியாட்சி பிடிக்காது. நான் மஞ்சு அரசனுக்கு விடுத்த பகி

ரங்க அறிக்கையை அனைவரும் உண்மை என்று நினைத்து விட்டனர். ஆனால் பூயி மன்னனுக்கு நான் எழுதிய அந்தரங்கக் கடிதத்தைப் பற்றி எவர் அறிவார்? அதில் நான் அரசன்; அதிகாரம் முழுவதும் என் கைக்கு மாற்றிவிடும்படியும் அரசனுக்கு உடந்தையாக இருக்கின்றேன் என்றும் எழுதினேன் அந்த முட்டாளும் அஃது உண்மை என்று கருதிவிட்டான். முடிதுறக்கும் போதும் என் விருப்பப்படியே சகல அதிகாரங்களும் என் வசம் ஒப்படைத்துச் சென்றான். அவன் அவ்விதம் செய்ததினால்தான் அவனுக்கு எல்லா வசதிகளுடனும் வாழ வழி செய்து கொடுத்தேன். ஆனால், அரசனின் அதிகாரத்தை அரசன் எனக்குத் தந்ததை சன்யாட்சன் ஒருவன்தான் தடுத்தான். நான் அவனுக்குத் தகுந்த சமாதானம் கூறிச் சரிபடுத்தி விட்டேன். என்னை முற்றிலும் நம்பி சன்யாட்சன் தன் தலைமைப் பதவியை எனக்குத் தந்துவிட்டான். இன்று நான் சீனக் குடியரசின் முதல் தலைவன் வெளிக்கு; ஆனால் இன்னும் சில தினங்களில் சீன நாட்டின் சர்வாதிகாரி நான்!

என்னை மக்கள் மன்றத்தினர் முழுவதும் நம்பவில்லை என்பது எனக்குத் தெரியும். அவர்கள்தான் உண்மையான புரட்சிக்குப் போராடியவர்கள். அவர்கள் அனைவரும் குடியரசுக் கொள்கையில் தளராத உறுதி உடைய தென்னாட்டவர்கள். இவர்களிடம் நாம் எந்தப் பயனையும் எதிர் பார்க்க முடியாது. நமது படலம் வடநாட்டில்தான் இருக்கிறது. தென்னாட்டவர்கள் என்னை

வடநாட்டிற்கு அனுப்ப விரும்பவில்லை. அதனுல் தான் என்னை நான்கிங்கில் பதவியேற்க வற்புறுத்தினர். குடியரசின் தலைநகரமும் நான்கிங்தான் என்றனர். இதை முடியரசில் விருப்பமுடைய நான் எப்படி ஒப்புக் கொள்ள முடியும். கடைசியில் பிகிங்கில் பதவி யேற்றேன். இதற்கு நான் எவ்வளவு சமாதானங்கள் சொல்ல வேண்டி யிருந்தது தெரியுமா?

குடியரசின் அரசியல் திட்டப்படி பார்லிமெண்ட் கூட்டப் பட்டது. நிரந்தர அரசியல் நிர்ணயம் செய்ய வேண்டி யிருந்தது. இவைகளை நான் தடையில்லாமல் செய்து முடித்தேன். பார்லிமெண்ட் தேர்தல்கள் நடைபெற வேலைகள் ஆரம்பமாயின.

தன் தலைமைப் பதவியை எனக்குக் கொடுத்துவிட்டு ஒதுங்கி யிருந்த சன்யாட்சன் சும்மா இருக்க வில்லை. தன் கட்சியை வலுவு படுத்தும் காரியத்தில் ஈடுபட்டான். அத்துடன் குடியரசுக் கொள்கையை ஆதரிக்கும் மற்றக் கட்சிகளையும் தன்னுடன் சேர்த்துக் கொண்டான். அன்று வரையிலும் டுங்-மெங்-ஹூயி கட்சி என்று பெயர் பெற்று மறைமுகமாய் வேலை செய்த இவர்கள் குடியரசு மலர்ந்தவுடன் பகிரங்கமாய் வேலை செய்ய முற்பட்டனர். அதன் பிறகுதான் அந்தக் கட்சியின் பெயரையும், சில மாற்றங்களையும் செய்து கோமிண்டாங் கட்சியாக மாற்றினுர்கள். இவர்கள் அரசியலில் கலந்து கொண்டனர். இவர்களுள் தென்னுடவர்கள் உண்மையான குடியரசு நிலவ வேண்டும் என்று

கருதியே வந்தார்கள். இந்த விறு விறுப்பைப் பார்த்து நான் சற்றுப் பயந்துவிட்டேன். எங்கே எனது எண்ணம் நிறைவேருமல் போய்விடுமோ என்று நினைத்தேன். அங்கே நானும் ஒரு போட்டிச் சங்கம் அமைத்தேன். அதன் பெயர் முன்னேற்றக் கட்சி! இதில் இருந்தவர்கள் வட நாட்டவர். இதன் ஆதரவாளர்கள் பெரிய நிலச்சுவான் தாரர்கள்; படைத் தலைவர்கள்; மஞ்சு அரசாங்கத்தில் உடம்பு நோகாமல் ஊதியம் பெற்ருேர் முதலியவர்கள். இவர்களுடைய தயவும் உதவியும் இருந்தால் தானே நான் சர்வாதிகாரியாக முடியும்? இவர்கள் அரசியலில் எந்த மாற்றமும் வேண்டாம் என்று கூறுபவர்கள். இவர்களை நான் ஒரு கருவியாக உபயோகித்துக் கொண் டேன். அதன் பிறகு நாடு பிளவு பட்டது. வட நாட்டுக் கட்சி, தென்னுட்டுக் கட்சி என்று பிரிவினைகள் ஏற்பட் டன. எது ஏற்பட்டால்தான் எனக்கென்ன? நான் சீனு வின் சர்வாதிகாரி யாகவேண்டும். அதுதான் என் அடக்க முடியாத ஒரே ஆசை!

தேர்தல்கள் நடைபெற்றன. ஆனுல் சன்யாட்சன் னின் கட்சியினர் அதிகமான இடங்களைச் சட்டசபையில் அடைந்தனர். இந்த நிகழ்ச்சி எனக்கு எப்படிப் பிடிக்கும்? எதிர் கட்சிக் காரர்களின் எண்ணிக்கை சட்டசபையில் அதிகமா யிருந்தால், அரசாங்கத்தை என் விருப்பப்படி ஆட்டிப் படைக்க முடியுமா? இந்த வெறுப்பான நிகழ்ச்சியை என்னுல் பொறுத்துக்கொண் டிருக்க முடியவில்லை. அன்றியும் நிரந்தர அரசியல் திட்

டம் வகுக்கத் தீர்மானித்து அந்தத் திட்டங்களும் வகுக்கப்பட்டன. அதில் மக்கள் தலைவனுக்கு (எனக்கு) முழு அதிகாரமும் கிடையாது; வரையறுக்கப் பட்ட அதிகாரம் வழங்கப்படும்; பார்லிமெண்டின் அனுமதியின்றி எதையும் செய்யக் கூடாது இப்படிச் சட்டங்கள் உருவானால், நான் உருப்பட முடியுமா? யோசித்து யோசித்துப் பார்த்தேன். கோமிண்டாங் கட்சி ஒழிந்தால்தான் நமது எண்ணம் நிறைவேறும் என்பதைத் தெரிந்து கொண்டேன். இந்த எண்ணத்தின் காரணமாகப் பல கொலைகள் நிகழக் காரணமானேன். அரசியல் வட்டாரத்தில் ஒரு பெரிய பயங்கரத்தை உண்டு பண்ணிவிட்டேன். இன்னும் என்னென்னமோ செய்தேன். கோமிண்டாங் கட்சியினரை வேரறுக்க வேண்டிய பலாத்கார முறைகளையெல்லாம் கையாண்டேன். அப்போதும் அது ஒழிவதாகத் தெரியவில்லை. இறுதியாக, 1913-ஆம் ஆண்டில் கோமிண்டாங் கட்சியைச் சட்ட விரோதமான கட்சி என்று கூறி அந்தக் கட்சியைக் கலைத்து விட்டேன். அந்தக் கட்சி ஒழிந்ததும் என் விருப்பம்போல் நாட்டை யாளலா மல்லவா?—அதன் பிறகு அரசியல் திட்டத்தை என் விருப்பம்போல் மாற்றிக் கொண்டேன். ஆட்சி நடத்தப் பணம் தேவைப்பட்டது. அன்னிய நாட்டினரைக் கேட்டேன். எனக்குப் போட்டியிட்டுக் கொண்டு வந்து பணம் தந்தனர். என் அரசாங்கத்தையும் அவர்கள் ஆதரித்தனர். என்ன குறை எனக்கு?

• • •

## சன்யாட்சன்

என் அரசாங்கத்தையும் அவர்கள் ஆதரிக்கின்ற னர் என்ன குறை எனக்கு என்று இறுமாப்புடன் தான் இருந்தேன். யுவான் மீது சந்தேகம் கொண்ட எனது நண்பர்கள் என்னை முன்னரே எச்சரித்தனர். நான் வெளுத்ததெல்லாம் பால் என்று நம்பும் கூட்டத்தைச் சேர்ந்தவனானேன். யுவானின் ஒவ்வொரு சொல்லும் உண்மை என்று நம்பினேன். வஞ்சகன்! தேசத்துரோகி! லட்சக்கணக்கான மக்கள் பாடுபட்டுப் பெற்ற குடி யரசைச் சிதைத்துச் சித்திரவதை செய்துவிட்டான். தடி யடியும், சிறைவாசம் தலை மறைவு வாழ்வும், உயிர்ச் சேதமும் அன்றி வேறொரு நன்மையும் அறியாத—நாட் டின் விடுதலை ஒன்றையே உயிரைவிட உயர்ந்த இலட் சியமாகக் கருதிய—கோமிண்டாங் கட்சியைச் சட்ட விரோத மாக்கினான். ஆம்! குடியரசு மலர்ந்து விட்டது; குறைவு வராது என்று கருதிய மக்களை, கொடியவர்கள் என்று கூறிவிட்டான் சற்றும் கூசாமல்! தாராள மன துடன், நம்பிக்கையுடன், எவன் தலைமையி லிருந்தால் வாழ்வு கிடைக்கும் என்று எண்ணி எவனைத் தலைவனாக்

கிறார்களோ அவனே தன் மக்களைத் தடிகொண்டு தாக்கி அவர்களை விரட்டி விரட்டி அடித்தான். குடியரசு என்ற பால் சோற்றுத் திரளைப் பசி கொண்ட சீனக் குழந்தைகள் ஆவலோடு அருந்தச் சென்றபோது, பால் சோற்றை அருந்தாமல் தடுத்துவிட்ட தந்தைபோலானான் யுவான்! தன் சரித்திரத்தில் என்றும் மறைக்க முடியாத பெருங் களங்கத்தை உண்டு பண்ணிக் கொண்டான்.

என்ன செய்வது என்று புரியவில்லை எனக்கு! என் நண்பர்கள் என் முகத்தைப் பரிதாபத்தோடு பார்த்தனர். நானும் அவர்கள் முகத்தை அனுதாபத்தோடு பார்த்தேன். நாம் ஏமாற்றப் பட்டோம். "தோழர்களே! கவலை கொள்ளாதீர்கள்! இன்னும் கொஞ்சம் கஷ்டப் படவேண்டியிருக்கிறது; கவலையை மறப்போம்; கடமையைச் செய்வோம்; கொள்கையை நிலை நிறுத்துவோம்; முடியரசு மறுபடியும் முளைக்காதவாறு முட்டுக் கட்டைகள்போடும், யுவானின் சர்வாதிகாரத்தைக் கண்டிப்போம். புரட்சி செய்து பழக்கப்பட்ட நாம், மறுபடியும் புரட்சிப் போராட்டங்களை நடத்துவோம். தோல்வியைக் கண்டு கலங்காத நாம்; உண்மைக்காகப் பாடுபடும் நாம்—மக்கள் விடுதலைக்காகப் போராடும் நாம் நிச்சயமாக வெற்றி பெறுவோம். நமது வாழ்நாளிலேயே சீனாவின் குடியரசு பூரண வெற்றியுடன் அரசு வீற்றிருக்கும் கோலத்தைப் பார்ப்போம். கோமிண்டாங் கட்சி அந்த அரிய வேலைக்காகவே துவக்கப் பட்டது.

அதைச் செய்து முடிக்கும் வரையில் அது அழியாது; அதை எவரும் அழிக்கவும் முடியாது.'' என்று உணர்ச்சி யூட்டினேன். என் சொல்லை, என் கட்டளையைக் கடுகள வும் தட்டி நடக்காத நண்பர்கள் என்னை இன்றும் பின் பற்றினர். கட்டளையிட வேண்டினர். நானும் மிகவும் யோசனை செய்து 1913-ஆம் ஆண்டு ஜூலை மாதம் ஒரு புரட்சி செய்ய மக்களைத் தூண்டினேன். அதன்படியே நான்கிங், ஷாங்காய், காண்டன் முதலிய இடங்களில் யுவான்ஷிகாயின் சர்வாதிகாரப் போக்கைக் கண்டித்துப் புரட்சி நடைபெற்றது. ஆனால், யுவான் பெரும் படையை அனுப்பிப் புரட்சியை நசுக்கி விட்டான். நான் யுவான் ஷி காயின் படையினருக்குத் தப்பிச் செல்ல வேண்டியதாயிற்று. என்னைக் கைதுசெய்ய எண்ணினர். நான் எனது நண்பர்களின் உதவியால் கஷ்டப்பட்டுத் தப்பியோடி விட்டேன். ஜப்பான் சேர்ந்தேன். அங்கு என்னால் நிம்மதியாக வாழ முடிந்ததா? என் எண்ண மெல்லாம் யுவானை எப்படி ஒழிப்பது என்பதிலேயே நிலைத்திருந்தது. அதனால் டோக்கியோ நகரில் கோமிண் டாங் கட்சியை நிறுவினேன். அதன் மூலம் யுவானை விரட்டுவதற்குரிய வழிகளை ஆராய்ந்தேன்.

நான்தான் புரட்சிக்கு வித்து என்று யுவானுக்குத் தெரியும். அதனால் இந்தப் புரட்சியை ஒரு காரணமாக வைத்துக்கொண்டு, சட்ட சபையைக் கலைத்து விட் டான். புதிய அரசியல் திட்டங்களைச் செல்லாதபடி யாக்கிவிட்டான். அவனே சர்வாதிகார ஆட்சி நடத்தி

னன். இந்தச் செய்தி என் காதுகளில் விஷம் ஊற்றுவது போல் இருந்தது. அதன் பிறகு 1915-ஆம் ஆண்டு யுவான் சர்வ சீனுவுக்கும் சக்கரவர்த்தி என்ற பெயருடன் முடி சூடிக்கொள்ளப் போவதாய் அறிந்தேன். என் நெஞ்சிலே தேள் கொட்டியதுபோ விருந்தது. என்ன செய்வதென்றே புரியவில்லை.

* * *

## யுவான் ஷ காய்

என் நெஞ்சிலே தேள் கொட்டியதுபோலிருந்தது. என்ன செய்வதென்றே புரியவில்லை. ஜப்பான் ஜெர்மனிக்குச் சொந்தமான துறைமுகப் பிரதேசங்களைப் பிடித்துக் கொண்டது. ஜப்பான் நீட்டிய ஒப்பந்தத்தில் கையெழுத்திடுவதைத்தவிர வேறு வழிகள் தோன்றவில்லை. ஜப்பான் இவ்விதம் ஆக்கிரமிப்பதைச் சீனமக்கள் கண்டித்தனர். உள்நாட்டுக் குழப்பம், வெளிநாட்டுத் தாக்குதல் இவைகளால் பாதிக்கப்பட்டேன். இருந்தும் உள்நாட்டுக் கிளர்ச்சியை என் சாமர்த்தியத்தால் அடக்கிவிட்டேன். எப்படி அடக்கினேன்? எனக்கு சர்வாதிகாரமும் நீங்கள் தந்தால் ஜப்பானை சும்மா விட்டிருப்பேனு என்ற கேள்வியை எழுப்பி நகர முழு

வதும் பிரச்சாரங்கள் மூலம் பரப்பினேன். மக்கள் சில நிபந்தனைகளைச் சொன்னார்கள். அதை ஏற்றுக்கொள்வதாகக் கூறி சீன முழுமைக்கும் சக்கரவர்த்தியாக முடிசூடிக்கொள்ள நாள்கூடப் பார்த்துவிட்டேன். என் கனவு நனவாகும் காலம் நெருங்கி விட்டதை நினைத்து மகிழ்ந்தேன். இத்தனை நாள் எதற்காகக் காத்துக் கிடந்தேனோ அந்தப் பெரிய வாழ்வு 1915-ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் கிடைத்துவிடும் என்று திடமாக நம்பினேன். எல்லா ஏற்பாடுகளும் செய்தேன். நான் மகிழ்ச்சிக் கடலில் மூழ்கிக் கிடந்த நேரத்தில் என் மகிழ்ச்சியைக் குலைக்கக் கூடினர் தென்மேற்கிலுள்ள யுன்னான் வாசிகள்.

புரட்சி செய்கிறார்களாம் புரட்சி! என் முயற்சியை வீணாக்கும் நிகழ்ச்சி! வந்துவிட்டார்கள் வஞ்சகர்கள்! நான் வாழ்வதை விரும்பாதவர்கள்! அத்துடன் நின்று விட்டார்களா? தெற்குப் பாகம் முழுவதும் கிளர்ச்சிகள், கலகங்கள் ஏராளமாக முளைத்தன. கண்டிப்பாக என் எண்ணம் ஈடேறாது என்ன செய்வது என்று தோன்றாமல் தியங்கினேன்; திகைத்தேன். என் ஆசை கோட்டை அறுந்து விழுவது கண்டு ஆத்திரம் அடைந்தேன். நான் ஆத்திரத்துடன் அமைதி யிழந்திருந்த நேரத்தில் என் ஆசை நாயகியைக்கூடக் கொலை செய்து விட்டேன். என் மனம் உடைந்து விட்டது. நான் வாழ மாட்டேன். என் எண்ணத்திற்கும் ஆசைக்கும் முற்றுப் புள்ளி வைக்க வேண்டியதுதான்.

* * *

# கோமிண்டாங் கட்சி

எண்ணத்திற்கும் ஆசைக்கும் முற்றுப் புள்ளி வைக்க வேண்டியதுதான் என்று எண்ணி உடைந்து போன உள்ளத்துடன் எங்கள் தலைவரிடம் சென்றோம் நாடிருந்த நிலைமையை விளக்கினோம். அத்துடன் மற்றும் ஒரு சந்தோஷச் செய்தியையும் கவனமூட்டினோம். சர்வாதிகாரியாய் சர்வ சீனாவையும் ஆள நினைத்த ஆணவக்காரன் யுவான் ஷகாய் 1916-ஆம் ஆண்டு ஜூன் மாதம் ஆறும் நாள் இறந்து விட்டான் என்ற செய்திதான் அது. ஏற்கெனவே அறிந்திருந்த அவர் அஃதொழியட்டும். 'குடியரசு மலர வேண்டுமே அதற்குத்தான் நாம் பாடுபட வேண்டும்' என்றார். யுவான் ஷிகாய் இறந்த பின்னர் முதலில் புரட்சிப் படைகளுக்குத் தலைமை வகித்து, அதை வெற்றிகரமாய் நடத்திய லீயுவான் ஹூங் தலைமை ஏற்றான். அவன் இப்போது யுவானால் கலைக்கப்பட்ட சட்டசபையைக் கூட்டுவித்துத் தற்காலிகக் குடியரசுத் திட்டத்தை அமுல் நடத்த முற்படுகின்றான்; ஆனால் முதல் மந்திரி துவான் சீ ஜுயி என்னும் ஆணவக்காரன் தலைவரை மதியாமல் தான்தோன்றித் தனமாய் நடக்கின்றான். அன்று வரை யுத்தங்களில் நடு நிலைமை வகித்த சீனாவை யுத்தத்தில்

இழுத்துவிட்டான். பார்லிமெண்டின் அனுமதியைப் பெறவில்லை.

அன்றியும் பார்லிமெண்டை கலைத்தே விட்டான். இதன் காரணமாக சீனு, ஜெர்மனிமீது யுத்தம் தொடுத்திருப்பதாகக் கூறியது. உண்மையிலேயே யுத்தத்தை விரும்பாதவர்கள், பார்லிமெண்டி லிருந்து கலைந்து போனவர்கள், கோமிண்டாங் கட்சியைச் சேர்ந்தவர்கள், அனைவரும் ஒன்று கூடித் தென் பகுதிக்கு வந்து தங்களை ஒரு பொறுப்புள்ள பார்லிமெண்டாக அமைத்துக் கொண்டார்கள். அப்போதுதான் எங்கள் தலைவர் சன்யாட்சன் ஜப்பானிலிருந்து தாய்நாடு திரும்பினுர். அவரையே அந்தப் பார்லிமெண்டிற்குத் தலைமை தாங்க வற்புறுத்தினேம். சீனுவின் எல்லா அதிகாரிகளுக்கும் அடிப்படையாய் இருப்பது எங்கள் பார்லிமெண்ட் என்று பிரகடனப் படுத்தினேம். பின்னர் சன்யாட்சன் தலைமையில் ஒருதேசீய அரசாங்கம் நிறுவப்பட்டது. அது தான் காண்டன் அரசாங்கம். அதுதான் உண்மையான குடியரசுக் கொள்கையை ஏற்று நடக்கும் பொறுப்பு வாய்நத அரசாங்கம். பீகிங் அரசாங்கம் பிற்போக்குச் சக்திகளைக் கொண்ட ஒரு பொம்மை அரசாங்கம். ஒரே சமயத்தில் இரண்டு அரசாங்கங்கள் நடைபெற்று வந்தன. 1916–ஆம் ஆண்டு பீகிங் அரசாங்கம் சீனுவின் பெயரால் ஐரோப்பிய யுத்தத்தில் பிரவேசித்தது. அந்தச் சீனுவின் பெயர் சொல்லியே புரட்சி அரசாங்கமாகிய, காண்டன் தேசீய அரசாங்கம் அதைக் கண்டித்

தது. காண்டன் அரசாங்கம் மக்கள் ஆதரவு பெற்று வளர்ந்து வந்தது. அதற்குச் செல்வாக்கும் பெருகியது.

இந்தச் சமயங்களில் தலைமைப் பீடத்தில் அமர்ந் திருந்த சன்யாட்சன் பதவி மோகத்தில் மற்றவர்கள் போல் மூழ்கிவிடவில்லை. புரட்சி அரசாங்கங்களை அப் போதுக் கப்போது ஒழுங்கு படுத்தியும், கட்டுப்பாடு களைக் கவனப்படுத்திக் கொண்டும்வந்ததோடு, கோமிண் டாங் கட்சியை வலிவுபடுத்தி வந்தார். ஐரோப்பிய யுத்தத்திற்குப் பின் சீனு பாரீஸ் மாநாட்டில் ஏமாற்ற மடைந்தது. இந்த நிகழ்ச்சி சீன இளைஞர் உள்ளத்தில் ஒரு பெரிய கிளர்ச்சியை உண்டுபண்ணிவிட்டது. சீனப் பிரதிநிதிகளையும் 'வார்சேல்' சமாதான ஒப்பந்தத்தில் சீனப் பிரதிநிதிகளைக் கையெழுத்திட வொட்டாமல் தடுத்தது. இந்த அரிய பெரிய அரசியல் கிளர்ச்சிக்கு மூலகாரணமா யிருந்த கட்சி, எங்கள் கோமிண்டாங் கட்சி!

* * *

## சன்யாட்சன்

அரசியல் கிளர்ச்சிக்கெல்லாம் மூலகாரணமாயிருந்த கட்சி, எங்கள் கோமிண்டாங் கட்சி! எழுச்சியும் உலக அறிவும் பெற்ற இளைஞர்களுக்கு ருஷ்யாவும், அதன் நிகழ்ச்சிகளும அவர்களின் அறிவு கண்களை இன்னும் சற்று அதிகமாகத் திறக்க உதவின. லெனினுடைய தலைமையில் சோவியத் குடியரசு வெற்றிகரமாய் நடந்துகொண்டு வந்தும். ஜார் மன்னன் ஆட்சிக்குப் பின்னர் ருஷ்ய சமுதாயம் அடைந்த புதிய மாறுதல்களையும் கண்டு உலக மக்கள் அதிசயித்து நின்றனர். 1918-ஆம் ஆண்டு நான்கூட மாவீரன் லெனினைப் பாராட்டி ஒரு தந்தி அனுப்பினேன். என்னைப்போல் பல இளைஞர்களும் தந்தி கொடுத்தனர். அன்றிலிருந்தே சீன இளைஞர்களுக்குப் பொதுவுடைமையின்மீது ஒரு வெறி ஏற்பட்டுவிட்டது. இதன் விளைவு 1920-ஆம் ஆண்டில் சீனப் பொதுவுடமை கட்சி ஏற்பட்டுவிட்டது. அதன் பின்னர் ருஷ்யா தனக்கு நாடு பிடிக்கும் நாட்டம் இல்லை யென்றும், அதன் காரணமாகச் சீனுவிலிருந்து ருஷ்யா ஆக்கிரமித்துக் கொண்ட எல்லா நாடுகளையும், உரிமைகளையும் சீனுவுக்கே திருப்பித் தந்துவிடுவதாகவும் கூறிவிட்டது. இனிமேல் நட்பு முறை

யில் இரு நாடுகளும் உறவு கொள்ள வேண்டும் என்றும்; வியாபாரத் தொடர்புகளும் ஏற்படுத்திக் கொள்ள வேண்டும் என்றும், ருஷ்ய அரசாங்கம் கோருவதாக அறிவிக்கப் பட்டது. இந்தச் சமயத்தில் சீனவின் விஷயத்தில் மற்ற ஐரோப்பிய நாடுகள் நடந்துகொண்டதற்கும், ருஷ்யா நடந்து கொண்டதற்கும் உள்ள பெரிய மாறுதல்களை மக்கள், இளைஞர்கள் உணர்ந்துவிட்டனர். கேட்க வேண்டுமா? சீனத்து இளைஞர் பெருவாரியாக ருஷ்யாவுக்கு ஆதரவு காட்ட ஆரம்பித்து விட்டனர். மிக விரைவில் காண்டன் அரசாங்கத்திற்கும், ருஷ்யாவுக்கும் மிகுந்த நட்பு வளர்ந்துவிட்டது. காலேன்ஸ், போரோடின் என்ற இரண்டு ருஷ்ய அறிஞர்கள் சீனுவுக்கு வந்தனர். போரோடின், பிரசாரக நிபுணன்; காலென்ஸ் இராணுவ நிபுணன். இந்த இருவரும் என் அரசாங்கத்திற்கு ஆலோசகர்களாக வந்தனர். அரசியல் அறிவை எவ்விதம் அபிவிருத்தி செய்ய வேண்டும் என்ற வழி முறைகளையும், திட்டங்களையும் எனக்கு அடிக்கடி வகுத்துக் கொடுத்துதவினர். அவர்களின் ஆலோசனையின் பேரில் ஓர் இராணுவக் கழகம் நிறுவப் பட்டது. அந்தக் கழகத்தின் பிரதம அதிகாரியாக சி யாங் கை ஷேக்கை நான் நியமித்தேன். அத்துடன் மக்களுக்கு அரசியல் அறிவை ஊட்டத் தகுந்த பேச்சாளர்களைத் திரட்ட ஒரு கழகம் நிறுவப்பட்டது. இந்த ருஷ்ய அறிஞர்கள் மூலமாகப் பல புரட்சி எண்ணங்களை ஒன்று திரட்டி வெளியிட்டு வந்தேன். அந்தக்

கருத்துக்களின் சுருக்கத்தை நான் ஸான் மின் ஜுயி என்று கூறுவேன். அதற்கு மக்களின் மூன்று முக்கிய கொள்கைகள் என்று பொருள். 1. தேசீயம், 2. ஜன நாயகம், 3. வாழ்க்கைத் தத்துவம் என்றும் பிரித்துச் சொல்லலாம். இந்த அரிய கருத்துக்களை மக்களுக்குப் போதித்து வந்தேன். புதிய மறுமலர்ச்சி சீனு மலர வேண்டுமானுல், புதியதாய்த் தயாரிக்கப் படுகின்ற இராணுவத்தின் உதவி கொண்டு நாட்டின் ஒற்றுமையைக் குலேக்கும் சக்திகளை ஒழித்துக் கட்டவேண்டும். பயிற்சி பெற்ற பேச்சு வல்லவர்களைக் கொண்டு கோமிண்டாங் கட்சியின் லட்சியத்தையும், அரசியல் அறிவையும் மக்களுக்குப் புகட்ட வேண்டும்.

அதன் பிறகு மக்கள் அரசியல் அறிவு பெற்றுத் தங்கள் காரியங்களைத் தாங்களே செய்துகொள்ளும் சக்தி யுடையவர்களாக இருப்பர். அப்போதுதான் அரசாங்க நடவடிக்கைகள் நன்கு நடைபெறும் என்பதையும் நன்கு உணர்ந்தேன். அப்படிச் செய்தால்தான் அதற்குக் குடியரசு என்று பெயர். இவ்விதம் தீர்மானித்துக்கொண்டபின், சிதறுண்டும், முரண்பட்டுக் கொண்டும் இருந்த புரட்சிச் சக்திகளை யெல்லாம் ஒன்று திரட்டினேன். பொதுவுடைமை வாதிகளையும் கோமிண்டாங் கட்சியில் சேர்த்துக் கொண்டேன். கட்சியின் கொள்கைகள், கோட்பாடுகள், விதிமுறைகள் அனைத்தையும் மாற்றிஅமைத்தேன். அதன்பிறகுமக்கள் என்னைக் கட்சியின் சர்வாதிகாரமுடைய தலைவனுக நியமித்தார்கள்.

அதன்பிறகு காண்டன் தேசீய அரசாங்கமும் இராணுவ ஒழுங்குக் குட்பட்டு அந்த அரசாங்கத்தின் பிரசிடெண் டாகத் தேர்ந்தெடுக்கப் பட்டேன். அந்த அரசாங்கத் தில் பொதுவுடைமை வாதிகளும் வீற்றிருந்தனர். பொதுவுடைமைவாடை சீன அரசாங்கத்தில் வீசுவதைக் கண்ட முதலாளிகள் மனதில் திகில் குடிகொண்டது. அதன் காரணமாகச் சில எதிர்ப்புக் கோஷங்கள் கிளம் பின. இந்தக் கோஷங்கள் குழப்பத்தை உண்டு பண்ணும் என்று கருதினேன். அப்போது என் உடல் நலம் குன்றி இருந்தது. பொதுச் சேவை செய்பவர்கள் உடல் நலத்தைக் கவனித்தால், காரியம் ஒழுங்காக நடக்குமா? மிகவும் கஷ்டப்பட்டு அந்தக் குழப்பத்தை யும் கிளர்ச்சியையும் அடக்கி விட்டேன். நான் கடைசி யாகச் செய்ய வேண்டியது ஒன்றிருந்தது. அதாவது, வடமாகாணங்களில் இராணுவத் தளபதிகள் செய்து வந்த அட்டூழியங்களை அடக்க வேண்டும். அத்துடன் பீகிங் நகரில் அரசாங்கம் என்ற பெயருடன் இருக்கும் ஸ்தாபனத்தை ஒழித்துவிட்டு வலிவுள்ள ஒரு மத்திய அரசாங்கத்தை நிறுவ வேண்டும். இதற்காகவே நான் 1924-ஆம் ஆண்டு வரை அரும் பாடுபட்டு வந்தேன். இந்தச் சமயத்தில் வடமாகாணத்தவர்களில் சிலர் பீகிங் நகரில் ஒரு மத்திய அரசாங்கத்தை நிறுவ ஆவல் கொண்டுள்ளதாகவும், அது சம்பந்தமாக என்னுடன் பேச்சு வார்த்தைகள் தொடங்க வேண்டும் என்றும் என்னைக் கேட்டுக் கொண்டார்கள். நான் எதிர்பார்த்

திருந்த நல்ல சமயம் என்னை நாடி வரும்போது, எவ்வளவு மகிழ்ச்சி அடைந்தேன் தெரியுமா? நாட்டில் ஒற்றுமை நிலவப் போகிறது; குழப்பம் அழியப் போகிறது; குடியரசு மலரப் போகிறது. சீனு சீனர்களுக்கே! ஆகப்போகிறது என்று ஆனந்தக் கடலில் மூழ்கினேன்.

*　　　*　　　*

# கோமிண்டாங் கட்சி

நாட்டில் ஒற்றுமை நிலவப்போகிறது; குழப்பம் அழியப் போகிறது; சீனு சீனர்களுக்கே ஆகப் போகிறது என்ற ஆனந்தக் கடலில் மூழ்கினேம். எமது மாபெரும் தலைவர் சீனுவின் நன்மைக்காகச் சமரசம் பேசப் பீகிங் நோக்கிப் பயணமானுர்; பீகிங் போய்ச் சேர்ந்தார். நாட்டுக்கு உழைத்து உழைத்து உருக் குலைந்த அவர் உடம்பில் நோய் பரவியது. பீகிங்கிலிருந்த சன்யாட்சன் நல்ல செய்தி அனுப்புவார் என்று நாடு முழுவதும் எதிர்நோக்கிக்கொண் டிருந்தது. ஆனுல் பேச்சு வார்த்தை தொடங்குவதற்கு முன்னரே எங்களுக்குத் துக்கச் செய்தி வந்தது. ஆம்! ஈடு செய்ய முடியாத பெரிய நஷ்டம் சீனுவுக்கு ஏற்பட்டுவிட்டது. சீனுவின் தந்தை, குடியரசின் காதலன், எங்கள் மதிப்பிற்குரிய தலைவன் "டாக்டர் சன்யாட்சன்" இறந்து விட்டார். அன்று சீனு முழுவதும் துக்கக் கண்ணீர் வடித்துத் துடிதுடித்து நின்றது; கோமிண்டாங் கட்சியின் முதுகெலும்பு ஒடிந்துவிட்டது. அன்று 1925-ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் பன்னிரண்டாம் நாள்.

எங்கள் தலைவன் எங்கள் கட்சிக்கு, நாட்டிற்குச் செய்த நன்மைகளை, நாங்கள் எப்படி மறந்துவிட முடியும். 1905-ஆம் ஆண்டில் டோக்கியோ நகரில் கட்சியை நிறுவியவர் சன்யாட்சன். அப்போது எங்கள்

கட்சி, "டுங் மெங் ஹூயி" அதாவது சீன சகோதரத்துவ சங்கம் என்ற பெயருடன் நிகழ்ந்தது. அந்தச் சங்கம் நிறுவியபோது சீனாவில் முடியாட்சி நடைபெற்றுக் கொண்டிருந்தது. அதை நிலச்சுவான்தாரர்கள் ஆதரித்தனர். அந்த ஆட்சிபீடம் நிலச்சுவான்தாரருக்கு அதிக ஆதிக்கம்அளித்திருந்தது. இக்காரணங்களால் ஒருபக்கம் நிலமிழந்த விவசாயிகள் பெருகினர். அதைப் போலவே நிலங்களை அதிகமாய் உடைய நிலப் பிரபுக்கள் பெருகினர். இந்த நிலைமையில் நாடு இருந்தபோது தான் தலைவர் சன்யாட்சன் சங்கம் நிறுவினார். அதன் முக்கிய நோக்கங்கள்: நிலமில்லாத ஏழைகள், நிலபலம் உடைய பிரபுக்கள் என்ற ஏற்றத் தாழ்வை நீக்கி அனைவருக்கும் உழுது பயிரிடக்கூடிய நிலங்கள் கிடைக்குமாறுசெய்தல். முடியாட்சியை ஒழித்துக் குடியரசை நிறுவுதல் முதலியன.

இந்தக் கொள்கையின் காரணமாகத்தான் அனேகப் புரட்சிகள் தோன்றின. பின்னர் எந்த நோக்கத்துக்காகக் கட்சி பாடுபட்டு வந்ததோ அந்த நோக்கமாகிய குடியரசு மலர்ந்தவுடன், 1912-ஆம் ஆண்டில் தன் கட்சியின் பெயரை கோமிண்டாங் என்று மாற்றினார். பின்னர் அதைச் சீனப் புரட்சிச் சங்கம் என்று 1914-ஆம் ஆண்டு மாற்றி யுவான்ஷிகாயை எதிர்த்துப் புரட்சி செய்தார். அதன் பிறகு 1919-ஆம் ஆண்டில் கோமிண்டாங் சீன தேசீய கட்சியாக மாறி அமைந்தது. அப்போதுதான் இக் கட்சி நாடு பூராவும் பரவ இதன் செல்வாக்கு ஓங்கி

யது 1924-ஆம் ஆண்டில் அப்போதிருந்த சூழ்நிலைக்கு ஏற்றவாறு தமது கட்சியில் பொது உடமை வாதிகளையும் சேர்த்துககொண்டு சில மாற்றங்கள் செய்தார்.

எங்கள் தலைவர் சன்யாட்சன் மறைந்து ஆண்டுகள் அதிகமாயின ஆனால் நாங்கள் அவரை மறநது வாழ முடியவில்லை. எங்கள் தலைவரை நாங்கள் ஸுங்லீ என்ற மரியாதைப் பெயருடன்தான் அழைதது வருகிறோம். அத்துடன் ஒவ்வொரு திங்கள் காலை ஒன்பது மணி முதல் பன்னிரண்டு மணிக்குள் ஒரு மணி நேரத்தை எல்லாக் கட்சிகளும், அரசாங்க அலுவல்களும். ராணுவ நிலையங்களும் சனயாட்சன் நினைவுச் சடங்குகளை நடத்துகின்றன. நாட்டுப் பண்பாடி மரியாதை காட்டுகின்றனர். நாட்டுக் கொடிக்கும், கட்சிக் கொடிக்கும் சன்யாட்சன் உருவப் படத்துக்கும் மும்முறை வணக்கம் செலுத்துகின்றனர். சன்யாட்சன் நாட்டு மக்களுக்கு எழுதிவைத்துப்போன உயில் ஒன்றும் மரியாதையுடன் படிக்கப் படுகிறது. மூன்று நிமிடங்கள்வரை மௌனம் சாதிக்கின்றனர். இவ்விதம் நாங்கள் எங்கள் தலைவனைப் பாராட்டுகின்றோம்.

எங்கள் திருவிழாக்களில் முக்கியமானது சன்யாட்சன் பிறந்த நாள் விழாவும், மறைந்த நாள் விழாவுமாகும். அந்த நாட்கள் அரசாங்க விடுமுறை நாட்கள்.

கோமிண்டாங் கட்சியாகிய எங்கள் கட்சிக் கமிட்டிக் கூட்டத்தில் எங்கள் உத்தமத் தலைவரை சீனக் குடி

யரசின் தந்தையென அழைக்க வேண்டும் என்று தீர் மானிக்கப் பட்டது. அன்றையிலிருந்து சீன மக்கள் அப்படியே செய்து வருகின்றனர்.

சீனுவில் பரம்பரை பரம்பரையாகத் தொடர்ந்து நடைபெற்றுவந்த முடியாட்சி நிரந்தரமாக மறைந்து விட்டதற்கு மூலகாரணர் சன்யாட்சன்; முடியாட்சி ஒழிந்த பிறகு நாட்டின் சீர்கேடான நிலைமைகளைப் போக்கி எதிர்ப்புச் சக்திகளை ஒழித்து, பிரபுக்களின் கொட்டத்தை ஒழித்துத தேசீய ஒற்றுமையை, அமை தியை உண்டு பண்ணியவர் சன்யாட்சன். முழுசீனுவுக் கும் மத்திய அரசாங்கம் நிறுவி அசைக்க முடியாத வலி யுள்ள தாக்கப் பட்டவர் சன்யாட்சன்.

எங்கள் தலைவர் சன்யாட்சன் தனக்கு எல்லாம் தெரியும், என்று சொல்லவில்லை. ஆனுல் அவர் உலகமே வியக்கும்படியான அற்புத வேலைகளை அமைதியாகச் செய்து காட்டி யிருக்கிறுர். ஆணவம், அகங்காரம் அவ ருக்கு எப்படி யிருக்கும் என்பது தெரியாது; ஆனுல் அடக்கம், உண்மை, உத்தமத் தன்மை இவைகள் இவரை விட்டு நீங்கியதில்லை. வெற்றி கண்டு களிப் படையா விட்டாலும், இவர் தோல்விகளைக் கண்டு சற் றும் கவலை கொள்ளவில்லை; தளர்ச்சி அடையவில்லை.

இவரிடம் மனிதத் தன்மை மிகுந்திருந்தமையால் ஏழை மக்களும், பாடுபடும் பாட்டாளி மக்களும் இரக கம் காட்டி அவர்களின் வாழ்வுக்காகத் தன் வாழ்

வையே அர்ப்பணம் செய்தார். சீனுவின் நிகழ்காலத்தி லும், சொந்த வாழ்விலும் மனதைச் செலுத்தாமல் எதிர்கால சீனுவையே எண்ணி எண்ணி அதை உருவாக்குவதிலேயே சொந்த வாழ்வை மறந்தார். ஒற்றுமைதான் அவருடைய உயிர்நாடி; ஆனால் அந்த ஒற்றுமையைக் குலைத்துத்தான் அவருடைய சமகாலத் தவர்கள் முனைந்திருந்தனர். அவர் வாழ்ந்த அன்று அவருடைய பெருமையை அறிய மறந்தவர்கள், இன்று சன்யாட்சனைச் சீனுவின் தெய்வமாக எண்ணி வழிபடு கின்றனர். அவர் எழுதி வைத்துவிட்டுப் போனவை:

"சீன மக்களே!

நாட்டின் விடுதலைக்காக மக்களின் முன்னேற்றத்திற் காகப் பெரும் புரட்சிகளைச் செய்து கொண்டும், அரசியல் அறிவை மக்களுக்குப் புகட்டிக் கொண்டும் வருவதிலேயே நாற்பது ஆண்டுகளைக் கழித்திருக்கின்றேன். உலக நாடு களின் மத்தியில் நமது தாயகம் (சீனு) உரிமையுள்ள நாடா கவே, சரிநிகர் சமானமான நாடாக வேண்டும் என்பதற் காகவே நான் மேற்குறித்த புரட்சிகளைச் செய்து அதற்காக உழைத்து வந்தேன். இந்தப் பல ஆண்டுகளாகப் புரட்சிப் போராட்டங்களில் ஈடுபட்டு நான் தெரிந்து கொண்ட விஷ யம் என்னவெனில், நமது நோக்கம் ஈடேற; கருத்து உருவ கம் பெற; நாம் மக்களைத் தட்டி எழுப்ப வேண்டும். மற்ற உலக மக்களுடன் சேர்ந்து அவர்களைப் போலவே ஒரு பொதுவான போராட்டத்தில் நாம் இறங்க வேண்டும். நமது புரட்சிப் போராட்டங்கள் முடிந்து விட்டது என்று எவரும்

கருத வேண்டாம். அஃது இன்னும முடியவில்லை. என்றல் வெளியிடப்பட்ட நாட்டின் மறுமலர்ச்சித் திட்டங்கள், புனருத்தாரண அடிப்படைகள், 'மக்களின் மூன்றுவாழ்க்கைத் தத்துவங்கள்'' என்ற நூல்களில் விளக்கப்பட் டிருக்கிற கொள்கைகள் கோட்பாடுகள் இவற்றை நீங்கள் மறவாமல் பின்பற்றி வாருங்கள். நாட்டின் ஏற்றத் தாழ்வான உடன் படிக்கைகளை ரத்து செய்யவேண்டிய அவசியத்தைப் பற்றி நான் கூறிய உபதேசங்களை வீணுக்காமல் விரைவில் நடை முறைக்குக் கொண்டுவர முற்படுங்கள்.''

என்ற உயிலைப் பயபக்தியுடன் படிக்கின்றனர். மேதைகளில் ஒருவர், உததம மனிதர், சன்மார்க்கி. சீனுவின் குடியரசு தந்தை; கோமிண்டாங் கட்சியின் தலைவர். அவர் பிரிந்து விட்டார்! வருந்துகின்றோம.

ஆணவம் என்னும் காட்டில் வாழ்ந்துவந்த நிலப் பிரபுக்கள் என்னும் குள்ள நரிகளின்; கொட்டத்தை அடக்கிய சீனத்துச் சிங்கம் சன்யாட்சன் புகழ் வாழ்க! என்றுகூறி அமைதி பெறுவது அன்றி என் செய்வோம்! சன்யாட்சன் மணி மொழிகளில் ஒன்று உங்களுக்கு நினைவுப்படுத்திவிட்டு, தலைவர் சன்யாட்சனுக்கு எங்கள் கோமிண்டாங் கட்சியின் வணக்கம் செலுத்திவிட்டு விடைபெற்றுக் கொள்ளுகிறோம்.

''நாங்கள் எவரையும் அடக்கியாள மாட்டோம்; ஆனல், எவரும் எங்களை அடக்கியாள அனுமதிக்க மாட்டோம்''

வாழ்க சீனத்துச் சிங்கம்!

